Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 5



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ வைகாசி 1961 மே | இதழ் 5

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

# செய்திகள்

சைவ சித்தாந்தக் கோடைவகுப்பு: விளம்பரக் குறைவால் போதுமான மாணவர்கள் விண்ணப்பிக்காததால், கோடை வகுப்பு, சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையிலேயே மூன்று நாட்கள் மாலைகளில் மட்டும் சொற்பொழிவுகளாக 21-5-51 முதல் நடைபெறும். நிகழ்ச்சி அறிவிப்பு தினத்தாள்களில் வெளி வரும். அன்பர்கள் கண்டுகொள்க. திரளாக வந்து கேட்டுப் பயனடையவும்.

வேண்டுகோள்: நம் சமாஜம் இது காறும் பல இலட்சக் கணக்கான சமய நூல்களை வெளியிட்டுத் தமிழ்கூறு நல்லுலகத்திற்குத் தந்தது வெள்ளிடைமலை. அதுபோன்று தற்போது உயர்நிலைப் பள்ளிகளில் கற்கும் மாணவர் கட்கும் சமய அறிவு கற்பிக்க விரும்பி எளிமையான இனிமையான சொல்லாடல் நடையில் அறப்பயிற்சி மாலை என்ற தொடர் நூல்கள் ஐந்தினை வெளியிட எண்ணி யுள்ளது. அது பிற சமயத்தவர்கள் நீதி போதனை என்ற வகுப்பில் நடத்திக்கொண்டிருப்பதற் கொப்ப நம் சமயச் சார்பான குழந்தைகட்கு ஒழுக்கம், சமய அடிப்படை உண்மைகளைப் படிப்படியாய்க் கற்பிக்க எழுந்துள்ளது. கூடிய விரைவில் படிகள் சமாஜச் செயலாளரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். நம் சமயத்தைச் சார்ந்த பெரி யோர்கள் ஆதினங்கள் நடத்தும் பள்ளிகளில் நீதி போதனை வகுப்பில் இதனைப் பாடமாக வைத்துப் போதிக்குமாறு கேட்டுக் கொள்ளுகின்றோம்.—அம்பை - இரா. சங்கரன், துணைச்செயலாளர்.

பெரிய புராணச் சொற்பொழிவுகள்: சென்னை ஸ்ரீ கபாலீசுவரர், ஸ்ரீ சென்ன மல்லீசுவரர், ஸ்ரீ சென்ன கேசவப் பெருமாள், ஸ்ரீ மணலி லட்சுமண முதலியார் அறக்கட்டளைகளின்சார்பில், திருவாசகமணி திரு. கே. எம். பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., அவர்களைக் கொண்டு 1–5–61 முதல் 31–5–61 வரை நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இந்து அறநிலைய ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் 1–5–61 அன்று மாலை இச்சொற்பொழிவுகளைத் தொடங்கி வைத்தார்கள். அன்பர்கள் அனைவரும் இச் சிறந்த அரிய சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயனெய்தி மகிழலாம்.

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

மலர் 34 | பிலவ வைகாசி 1961 மே | இதழ் 5

## அருள்நந்தி சிவம்

(முருகவேள்)

### தத்துவ வித்தகர்

அருள்நந்தி சிவம் தமிழ் நாட்டில் தோன்றியருளிய 'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்' மிகப் பலருள் தலைசிறந்த ஒருவர். "தம்மானை அறியாத சாதியார் உளரே" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வியந்து வினவி இரங்கியமைக்கேற்ப, அருள்நந்தி சிவம் போன்ற அரும்பெருஞ் சான்றோர்களைப் பற்றி அறிந்துகொள்ளாமலே, நம் தமிழ் மக்களுள் எத்துணையோ பல்லாயிரவர் வாழ்ந்து வருகின்றனர்! தமிழ் நாட்டுச் சான்றோர்களுள் ஒவ்வொருவர் ஒவ்வொருவகையில் தலைசிறந்து திகழ்ந்தொளிரக் காண்கின்றோம். இலக்கணத் துறையில் தொல்காப்பியரும், நீதிநூற் றுறையில் திருவள்ளுவரும், காப்பியத்துறையில் இளங்கோ வடிகளும், கவிதைத் துறையில் கம்பரும், பக்தித் துறையில் மாணிக்கவாசகரும், வரலாற்றுத் துறையில் சேக்கிழாரும் போல, அருள்நந்தி சிவம் தத்துவத்துறையில் தலைசிறந்த வித்தகர் என விளங்குபவராவர்.

அருள்நந்தி சிவம், நமது சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்களில் ஒருவர்; ஆசிரியர் மெய்கண்ட சிவத்தின் மாணாக்கர்களுள் முதன்மை மிக்கவர். வடமொழியும் தென்மொழியும் மறைகள் நான்கும் பிறவுமெலாம் துறை போகக் கற்றுணர்ந்தவர்.

" பண்டைமறை களும்அதுநான் ஆனேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே "

எனவரும் இவர்தம் திருமொழி இவ்வுண்மையினை வலி யுறுத்தும். நான்மறைகளை மட்டுமேயன்றி, இவர் சகல வகையான ஆகமங்களையும் ஐயந்திரிபறச் செவ்விதிற் கற்று வல்ல பேரறிஞராகத் திகழ்ந்தமையின், இவருக்குச் 'சகலா கம பண்டிதர்' என்னும் சிறப்புப் பெயர் வழங்கிவந்தது. இவர் உண்மையிலேயே சகலாகமங்களிலும் வல்லவராக விளங்கியவர் தான் என்பது, உலகாயதன் முதற் பாஞ்ச ராத்திரி ஈறாக உள்ள பதினான்குவகைச் சமயக் கொள்கை களையும் நிரலே கிளந்தெடுத்துக் கூறி, அவற்றையெல்லாம் தமது சிவஞான சித்தியார் பரபக்கப் பகுதியில் தருக்க நெறிமுறை வழுவாது மறுத்துரைத்திருக்கும் மாட்சிமை யாற் புலனாம். இவர் தமது அருட்பெரும் குரவராகிய மெய்கண்டார் பெருமான்பால் தமது பலதிற ஐயங்களையும் வெளியிட்டு, அவற்றிற் குரிய விடைகளைத் தெரிந்து கொண்டு தனித்து மகிழும் முறையில், 'இருபா இருபஃது' என்னும் இனிய சிறியநூல் ஒன்றனையும் இயற்றியுள்ளார்.

சொற் சுருங்கிப் பொருள் பெருகித் தெளிவுமிக்குத் திகழும் வகையில், அறிவு நூல்களின் முடிபெலாம் அகத் தடக்கி, ஆசிரியர் மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் என்னும் நூலைத் தழுவி, அதன் வழிநூலாகச் 'சிவஞான சித்தியார்' என்னும் பெயரால் இவர் இயற்றியருளிய சிறந் தயர்ந்த மெய்ப்பொருள் நூல், தமிழ் மொழிக்கண் உள்ள தத்துவ நூல்களுளெல் லாம் மிகவும் தலைசிறந்து நிற்பதாகும். "சிவத்துக்குமேல் இல்லை தெய்வம்: சிவ ஞான சித்திக்குமேல் இல்லை நூல்" எனப் பாராட்டித் தமிழ்கூறும் நல்லுலகம் இதனைப் போற்றி மகிழ்ந்து புகழ்ந்து வருகின்றது.

தத்துவத் துறைப் பெருநூல்

" பார்விரித்த நூல்எல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதி போதும்..."

" பாதிவிருத் தத்தால்இப் பார்விருத்த மாகஉண்மை
சாதித்தார் பொன்னடியைச் சாரும்நாள் எந்நாளோ ?"

எனச் சான்றோர்கள் இதன் அருமை பெருமைகளை இனி

தெடுத்துப் பாராட்டியுள்ளனர். 'தண்டமிழின் மேலாம் தரம்' எனக் கூறத்தக்க நூல்களுள் ஒன்ருக ஒளிவிட்டுத் திகழும் சிவஞான சித்தியார், தமிழ் மக்களின் சமய தத்துவ உண்மைகளை விளக்கும் தன்னிகரற்ற நூலாகத் தனி மேம் பாடுற்று விளங்குகின்றது. இதனைச் "சிவாகமப் பொருள் களுக் கெல்லாம் ஓர் உரையாணி" என ஆசிரியர் சிவஞான சுவாமிகள் பெரிதும் புகழ்ந்து போற்றி மகிழ்ந்தின்புறுகின் ருர். இலக்கண இலக்கிய எழில் வளங்களும், தருக்கநெறி முறைச் சிறப்புக்களும், சமயநெறித் தத்துவக் கொள்கை களின் திட்ப நுட்பங்களும், திருமுறை நூல்களின் செம் பொருட் கருத்து நலங்களும், யோக ஞானுனுபவ உண் மைச் செய்தித் திறங்களும் பிறவுமெல்லாம் செறிந் தொளிர்ந்து, சிவஞான சித்தியார் அறிவின்ப விருந்தாய்ச் சுவை துளும்பித் திகழாநிற்கின்றது. சிறந்துயர்ந்த இனிய அரிய செய்யுள் நடையில் இத்துணைப் பலதிற எழில்நலங் களெல்லாம் ஒருங்கியைந்து இனிதமைய இயற்றப்பட் டுள்ள பிறிதொரு நூலை, வேறு பிறிதெங்கணும் காண்டல் அரிது என்று நாம் துணிந்து கூறுதல்கூடும். தமிழ்மொழிப் புலமைத் துறையில் "நூலாருள் நூல்வல்லார்" எனப் பிறங்க விரும்பும் எவரும் இதனை இன்றியமையாது கற்றுணரற் பாலராவர்.

அருள்நந்தி சிவம் மிகச் சிறந்த ஓர் அறிவு நெறியாளர் (Rationalist). அவர் 'சகலாகம பண்டிதர்' என விளங்கி யிருந்தாராயினும், தமது நூலில் வெறும் ஆகமப் பிரமாணங் களுக்கே முதன்மை கொடுத்து, அவற்றினின்று மேற் கோள்களை எடுத்துத் திரட்டிக் காட்டிச் செல்லாமல், பொதுவறிவு நெறிக்கு இயைந்துநிற்கும் வழிவகைகளிலேயே தம் கருத்துக்களைக் கூறி வலியுறுத்திச் செல்கின்ருர். ஆகமப் பிரமாணத்தினும் அனுமானப் பிரமாணத்திற்கே அருள் நந்தி சிவம் முதன்மை கொடுத்துள்ளனர் என்பதனை,

அறிவு நெறியாளர்

" ஈண்டுக் கூறுவன எல்லாம் பொருந்துமாறு
பற்றியன்றி ஆகம அளவை பற்றியல்ல "

எனவரும் சிவஞானசுவாமிகள் உரை (சுபக். 28)யால் உணரலாம். இங்ஙனம் எத்துணை எளியரும் தாமே கருக்

நுக்களைச் சிந்தனைசெய்து அவற்றின் வன்மை மென்மை களை உணர்ந்துகொண்டு நலம்பெறற் பொருட்டே, அதற் கோர் உறுகருவியாக 'அளவையியல்' என்னும் பகுதியினைத் தமது நுண்மாண் நுழைபுலம் தோன்றச் சிவஞானசித்தி யார் சுபக்கத் தொடக்கத்தின்கண் அழகுற அமைத்து, ஏற்றபெற்றி சுருங்க வுரைத்து விளங்க வைத்துள்ளார். இவ்வாற்றால், ஆசிரியர் அருள்நந்தி சிவனார் ஒரு சமய தத்துவ நூலறிஞர் (Philosopher) மட்டும் அல்லர்! மிகச் சிறந்த ஒரு தருக்கநூற் பேரறிஞரும் (Logician) ஆவார் என்பதனை நாம் உணரப் பெறுகின்றோம்.

> "ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலகமெல்லாம்
> வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே
> தருபவன் ஒருவன் வேண்டும்! தான்முதல் ஈறு மாகி
> மருவிடும்! அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே!"

எனவரும் சிவஞானசித்தியார் முதற் சூத்திரச் செய்யு ளுக்கு மறைஞான சம்பந்த தேசிகர் வகுத்துள்ள உரை, ஆசிரி யர் அருள்நந்தி சிவத்தின் தருக்கநெறி பிறழாத் தன்மை யினை விளக்கும் சான்றாக, ஈண்டைக்கு இயைபுபற்றி எண்ணி யுணர்ந்து இன்புறற் பாலது.

> "இப் பிரபஞ்சத்துக்குக் கருத்தா உண்டு என்பது பிரதிக்ஞை. அதற்கு ஏது யாது? என்னின், ஒருவனொடு ஒருத்தி ஒன்று என்று அவயவப் பட்டிருத்தலால் என்பது ஏது. அஃது என்போல? என்னின், கடாதி காரியத்துக்குக் குலா லனைப்போல் என்கை திருட்டாந்தம். இக் கடாதி காரியத்துக்குக் குலாலன் உளன் என மதித்தாற்போல, ஒருவனொடு ஒருத்தி என்னும் காரியத்திற்கு ஒரு கர்த்தா உண்டு என மதிக்கை உப நயம். முன்சொன்ன திருட்டாந்தத்துக்கு இந்தத் திருட்டாந்தம் ஒத்திருக்கையால் எதுவாகிய காரியத்துக்கு ஒரு கர்த்தா உளன் என்ற பிரதிக்ஞையைத் திடம் பண்ணுகை நிகமனம்."

அருள்நந்தி சிவனார் தமது ஆசிரியராகிய மெய்கண் டார் பெருமானின் அடிச்சுவடு பின்பற்றிச் சிறிதும் பிற ழாது நூலியற்றிச் சென்றிருக்குந் திறம் பெரிதும் வியக்கற்

பாலதாக உள்ளது. முதல் நூலாகிய சிவஞானபோதத் தினைச் சிறிதும் பிறழாது அடியொற்றி நின்று, சிவஞானசித்தியார் தத்துவக் கருத்துக்களை இலக்கியச் சுவைபெருக விளக்கிச் செல்கின்றது! தாம் சகலாகமங்களையும் பயின்றுணர்ந்து கைவந்த வடமொழிப் பெரும்புலவராக விளங்கி யிருந்தனராயினும், சங்கரர், இராமாநுசர், மத்துவர் என்பவர்களைப் போல வடமொழியிலேயே தமது ஒப்புயர் வற்ற தத்துவநூலைச் செய்தொழியாமல், தமது ஆசிரியரின் திருக்குறிப்பின் வழிநின்று தமிழ்மொழியிலேயே ஆக்கி யளித்தமையும், அது தானும் இழுமெனும் மொழியான் விழுமியது பயிலத் தங்குதடையின்றிப் பொங்கி எழும் அழகிய இனிய அரிய கவிதை வடிவில் அமைத்தருளினமையும், நினைத்தொறும் நினைத்தொறும் வியப்பும் விம்மிதமும் விளைவிக்கின்றன. சிவஞானபோதம் சுருங்கிய மூலப்போலவும், சிவஞானசித்தியார் அதற்குச் செய்யுள் வடிவில் அமைந்த ஓர் அரிய விரிவுரைபோலவும் விளங்குகின்றன எனலாம். பிறவகை உரை நூல்களோடு ஒப்பிட்டுக் காணுங்கால், சிவஞான போதத்திற்குச் செய்யுள் வடிவில் அமைந்த விரிவுரை நூல் போலத் திகழும் சிவஞான சித்தியாரின் அருமை பெருமைகள் மேலும் செவ்விதினிது தெளியப் படும்.*

தமிழ்த் தத்துவ விரிவுரை யாளர்

தமிழிலக்கியங்களுள் முதன் முதலாகச் சிவஞான போதத்தின்கண் "மங்கலவாழ்த்து" முறையினை ஆசிரியர் மெய்கண்டார் அமைத்துக் காட்டினர். அழகிய அரிய அம்முறையினைத் தாமும் பின்பற்றிக் கடைப்பிடித்து,

மங்கல வாழ்த்து

---

* "The Scholastic Period also dates from the second century A. D.......The literature soon becomes grossly polemical. We find a brood of schoolmen, noisy controversialists indulging in over-subtle theories and fine-spun arguments, who fought fiercely over the nature of logical universals. Many Indian scholars dread opening their tomes which more often confuse than enlighten us. Instead of thought we find words, instead of philosophy logic-chopping. Obscurity of thought.

" அறவகைச் சமயத்(து) ஓர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாய், வேதா கமங்களின் குறியி றந்தங்(கு)
அறிவினில் அருளால் மன்னி, அம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம் "

என அருள்நந்தி சிவனார் அருளிச் செய்திருக்கும் திறம் பெரிதும் சுவைதளும்பிச் சிறந்தொளிர்கின்றது.

" இதனுள், அறவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் எனவே மேற்கூறிப்போந்த பரபக்கத்துப் பொருளும், வேறுங்குறியது வுடைத்தாய் எனவே முதற் சூத்திரம் முதலிய ஐந்து சூத்திரத்திற் கூறப்படும் தடத்தப்பொருளும், வேதாகமங் களின் குறியிறந்து எனவே இரண்டும் அன்றி வினைச் சொரூப லக்கணம் கூறும் ஆறாம் சூத்திரப்பொருளும், அறிவினில் எனவே ஆன்மசொரூபம் கூறும் ஏழாம் சூத்திரப் பொருளும், அருளால் மன்னி எனவே ஞானதரிசனம் கூறும் எட்டாம் சூத்திரப் பொருளும், அம்மையோடப்பனாகி எனவே ஞானமும் ஞேயமும் ஒருதிருவுமாகக் காணப்படும் ஒன்பதாம் சூத்திரப் பொருளும், செறிவொழியாது நின்ற எனவே ஏகனாகி நிற்றல் கூறும் பத்தாம் சூத்திரப் பொருளும், சிவனடி சென்னிவைப்பாம் எனவே அரன் மலரடிக்கீழ் இருத்தல் கூறும் பதினோராம் சூத்திரப் பொருளும், சென்னிவைப்பாம் என்னும் சொல்லியல்பான் அணைந்தோர் தன்மை கூறும் பன்னிரண்டாம் சூத்திரப் பொருளும் குறிப்பான் அறியக்கிடந்தன. இங்ஙனம் தொகுத்துக் காட்டுதல் மங்கல வாழ்த்துக்கு இலக்கணமென உணர்க......"

எனவும் பிறவாறும் சிவஞானசுவாமிகள் நுண்ணிதின் உணர்ந்து வரைந்திருக்கும் உரைத்திறம், பொன்னினும் மணியினும் பெரிதும் பொதிந்த போற்றற்பாலது.

அருள்நந்தி சிவம் ஒரு சிறந்த தத்துவ வித்தகர், தருக்க நூற்கலைஞர், சிவஞானபோத விரிவுரையாசிரியர், மட்டுமே யல்லர்! 'செவ்விய மதுரஞ் சேர்ந்த நற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய' உத்தமக் கவிஞருமாவார்! ஒரு சிறு சொற் றுணும் வறிதே விரவாமல், ஆழ்ந்த பெரும்பொருள் நலங்

உத்தமக் கவிஞர்

---

subtlety of logic, intolerance of disposition mark the worst type of the commentators......"

—*Dr. S. Radhakrishnan, Indian Philosophy, p. 59*

கள் பொதுளிப் பொலிய, மாற்றார் கருத்துக்களை யெல்லாம் மறுத்தொழித்துத் தமது கொள்கைகளை நிலைபேறுற நிறுவும் வகையில், அவர்தம் அழகிய இனிய செய்யுட்கள் அமைந்து விளங்குதல் காணலாம் :

" நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் அகிலத் திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகம் தனுகா ணமும்உ யிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே "

" மாயையின் சொரூபம் கூறுவார், புவனபோகமும் தனுகாரணமும் உயிர்க்காய் என்றும் ; அதுவும் மாத்தியமிகர் மதம் பற்றிச் சூனியத்திற் செல்லாமைப் பொருட்டு அகிலத்திற்கோர் வித்துமாய் என்றும்; அதுவும் கணிகவாதிகள் மதம்பற்றிச் சார்பினிற் செல்லாமைப் பொருட்டு நித்தமாய் என்றும்; அதுவும் உலகாயதர் மதம்பற்றிப் பூதங்களிற் செல்லாமைப்பொருட்டு அருவாய் என்றும்; அதுவும் வைசேடிகர் முதலியோர் மதம்பற்றிப் பரமாணுக்களிற் செல்லாமைப் பொருட்டு எங்தும் வியாபியாய் என்றும்; அதுவும் சாங்கியர் மதம்பற்றி முக்குணங்களிற் செல்லாமைப் பொருட்டு ஏக நிலையதாய் என்றும்; அதுவும் பாற்கரியர் மதம் பற்றிப் பிரமத்திற் செல்லாமைப் பொருட்டு விமலனுக்கோர் சத்தியாய் என்றும்; அதுவும் சிவாத்துவித மதம்பற்றிச் சிற்சத்தியிற் செல்லாமைப் பொருட்டு அசித்தாய் என்றும் ; அதுவும் மாயாவாதி மதம்பற்றி அநிருவசனத்திற் செல்லாமைப்பொருட்டு வைத்ததோர் மலமாய் என்றும்; இத் தன்மைத்தாகிய மாயை ஆணவ மலம்போல மயக்கமேசெய்யும் என்னும் சைவருள் ஒரு சாராரை மறுத்தற்பொருட்டு மயக்கமும் செய்யும் என்றும் கூறினார்...மயக்கமும் என்னும் உம்மை அது தன்னியல்பன்மை யுணர நின்றது."

எனச் சிவஞான சுவாமிகள் விளக்கியிருக்கும் உரைத் திறனால், ஒரு சிறு சொற்றானும் வறிதே விரவாமல், திட்ப நுட்பங்கள் செறிய இச்செய்யுள் அமைந்திருத்தல் காணலாம். சிவஞானசித்தியாரில் இன்னோரன்ன செய்யுட்கள் பல அமைந்து காணப்படுதல், ஆசிரியர் அருள்நந்தி சிவத்தின் அளப்பரு மாட்சிமைகளைப் புலப்படுத்துவதாகும்.

(தொடரும்)

# ‘சைவநெறி தான்பெற்ற புண்ணியக் கண் இரண்டு’

(சித்தாந்தக் கலைமணி - வித்துவான் -
சி. அருணை வடிவேலு முதலியார், காஞ்சிபுரம்)

[மலர்-34 ; இதழ் 3 ; 128-ம் பக்கத்தொடர்ச்சி]

“ இரப்பவர்க் கீய வைத்தார் ; ஈபவர்க் கருளும் வைத்தார் - கரப்பவர் தங்கட்கெல்லாங் கடுநரகங்கள் வைத்தார் ” (திருநேரிசை - திருவையாறு) எனவும், “ இலங்காலஞ் செல்லாநாள் என்று நெஞ்சத் திடையாதே யாவர்க்கும் பிச்சையிட்டு - விலங்காதே நெறி நின்று ” (திருத்தாண்டகம் - திருக்கன்றாப்பூர்) எனவும், “ இலம் பொல்லேன் : இரப்பதே ஈயமாட்டேன் ; என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே ” (தனித் திருத்தாண்டகம்) எனவும் வருவனபோல ஈகையைச் சிறந்தெடுத்தோதி வற்புறுத்தும் பகுதிகளைத் திருநாவுக்கரசர் திருமுறைகளிலேயே காண்கின்றோம். “ வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்” (திருப்பாசுரம்) எனவும், “ஒருங்கிய மனத்தோடு இருபிறப் போர்ந்து - முப்பொழுது குறை முடித்து நான் மறை யோதி - ஐவகை வேள்வியமைத்(து) - ஆறங்க முதலெழுத் தோதி - வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும் - பிரமபுரம் பேணினை” (திருவெழுகூற்றிருக்கை) எனவும், “ கற்றுங் கெரி - யோம்பிக் கலியை வாராமே - செற்றார் ” (கோயில்) எனவும் வருவனபோல, எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு வான் முகில் வழாது பெய்து மலிவளம் சுரக்குமாறு பிறர் நலத்தின் பொருட்டு இறைவனைத் தீயிடத்தும் திருமேனிகளிடத்தும் வழிபடும் வழிபாட்டினைச் சிறப்பித்துரைக்கும் பகுதிகளைத் திருஞானசம்பந்தரது திருமுறைகளிலேயே மிகுதியாகக் காண்கின்றோம். ஆகவே, அவர்கள் முறையே அறத்தினை இல்வாழ்க்கை நிலையிலும், துறவு வாழ்க்கை நிலையிலும் உணர்த்தினர் எனல் பொருந்துவதேயாம்.

மெய்ந்நெறிப் பொருள்களாகிய இறைவனது பெருமை, அவனது வழிபாடு என்பவற்றைத் திருஞானசம்பந்தர்

பெரும்பான்மையும் "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள் சோதி; ஆதலின், மனம் பற்றி வாழ்மின்; புத்தரும் சமணரும் புறனுரைத்தலைக் கேளன்மின்; இறைவனது வேடங்கள் இவை, அவனது பொருள்சேர் புகழ்கள் இவை அவற்றை யுணர்ந்து அவனை வாழ்த்துமின்; வணங்குமின் அவ்வாறு செய்யவே வினைபோம்; இடர்கெடும்; இன்பம் உளதாம்" என ஆணைமாத்திரையால் அருளிச் செய்தலும், திருநாவுக்கரசர் அவற்றை அவ்வாறன்றித் தனித்தனிப் பொருளாகச் சிறந்தெடுத்துக் கொண்டு, 'தசபுராணம், இலிங்கபுராணம், ஆதிபுராணம், பாவநாசத் திருப்பதிகம், அடையாளத் திருத்தாண்டகம், திருவங்கமாலை, போற்றித் திருத்தாண்டகம்' என்பன முதலாக அடைவுபட வைத்து, நடைமுறையிற் கைக்கொள்ளுமாறு அருளிச் செய்தலும்; அவர்தம் திருமுறைகளில் வெளிப்படையாகக் காணப் படுவனவேயாம். அதனால், அவர் தம் திருமொழிகள் முறையே தொகுத்துரையும், விரித்துரையுமாதல் தெளிவு. இது பற்றியே சேக்கிழார் திருஞானசம்பந்தரது திருப் பதிகங்கட்கே சில இடங்களில் பொருள்விளக்கம் செய்து செல்கின்றார்; அவ்விளக்கங்கள் அவர் திருநாவுக்கரசர் திருமொழிகளில் கண்டனவாம்.

இனித் திருநாவுக்கரசர், தம் அருளுரைகளை, "மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன்; விடுத்த தூதுவர் வந்த வினைக்குழிப் படுத்தபோது பயனில்லை பாவிகாள்; மாடுதேடி மயக்கினில் வீழ்ந்து நீர் ஓடியெய்த்தும் பயனில்லை ஊமர்காள்" என்றாற்போல, நம்மனோரை அழைத் தழைத்தும், இடித்திடித்தும், "பத்தனாய்ப் பாடமாட்டேன்; எத்தினாற்பத்தி செய்கேன்; ஓம்பினேன் கூட்டை வாளா; பாம்பின் வாய்த் தேரைபோலப் பலபல நினைக்கின்றேன்; மக்களே மணந்த தாரம் அவ்வயிற்றவரை ஓம்பும் சிக்குளே அழுந்தி ஈசன் திறம்படேன்...என் செய்வான் தோன்றினேன்" என்றாற்போல, நம்மனோரது நிலையைப் பொருந்தி நின்றுணர்ந்தும் உலகத்தொடு தொடர்புபட்டு நின்று அருளுதலையும், திருஞானசம்பந்தர் அவ்வாறன்றி, உளங் குளிர்ந்த போதெலாம் உகந்துகந்து பாடுவாராய், இறைவன் பெருமைகளையும், அவன் எழுந்தருளியுள்ள தலப் பெருமை

களையும், பிறவற்றையும் வருணனை முதலிய பல இலக்கியச் சுவைகள் தோன்றப் பலவகைப் பண்களில் பலவகைத்தான அறுதிகள் அமையச் சித்திரக் கவிகள் முதலிய பலவகைக் கவிகளில் தம் அருளுரைகளை உலகத்தொடு தொடர்புபடாது இறைவனது இன்ப மேலீட்டினின்றே அருளுதலையுங் காண்கின்றோம். ஆகவே, அவை முறையே அருள் விளக்க நிலையிலும் ஆனந்த விளக்க நிலையிலும் இருந்து தோன்றி யனவாயும், நம்மனோர்க்கு அந்நிலைகளை அருளுவனவாயும் உள்ளன என்பது விளங்கும். இவ்வாற்றால் இவ்விருதிறத்து மும்மூன்றுவமைகளும் அத்துணைக் கருத்துக்களை யுடையன வாதல் காண்க.

இத்திருப்பாட்டுள் கூறப்பட்ட உவமைகள் யாவும் இவ்விரு பேராசிரியர்களது இன்றியமையாச் சிறப்பினை உணர்த்துவனவாயினும், 'சைவநெறி தான் பெற்ற புண்ணியக்கண் இரண்டு' என்பதே அவற்றுள் மிகவும் சிறப்புடையதாகும். எனெனின், ஏனைய உவமப்பொருள் கள் இரண்டும் உலகத்தோடும் இறைவனோடும் தொடர் புடைய பொருள்களாய் நிற்க, இஃது ஒன்றே சைவ சமயத்தோடு தொடர்புடைய பொருளாய் நிற்றலான் என்க. 'இவ்வுவமையாற் குறிக்கப்பட்டது கலைஞானம்' என்பது முன்பு கூறப்பட்டது. அறவுணர்வு முதலிய மூன்றனுள் கலைஞானமே ஏனையிரண்டற்கும் இன்றியமை யாத தாகலின் அதுவே சைவச் நெறியாகும். அந்நெறிக்கு இவர்கள் கண் என்றதனால், இவர்களே இந்நெறிக்கு உயர்ந்த, நிரம்பிய கலைஞானத்தை அருளியவர் என்பது விளங்கும். ஆகவே, இவ்வுவமை தானே இவ்விரு பேராசிரி யர்களது நிறைபெருஞ் சிறப்பினை யுணர்த்தப் போதிய தாயினும், நன்கு விளங்குதற்பொருட்டு வேறு வேறு உவமைகளுங் கூறினர். இவ்வுவமை ஒன்றே, அருட் பேராசிரியர் ஒருவராகாது இருவராயினமையையும் நன்கு தெளிவிப்பதாகும். எங்ஙனமெனின், கண் இரண்டாய் இருத்தலே இயல்பும் இன்றிமையாததுமாகும் என்பது தெளியப்பட்டதாகலின். கண் ஒன்றிருப்பினும் அமையா தென்பது, நம்பியாரூரர், இருகண்களும் மறைய, பின்னர் ஒரு கண் பெற்றும், குன்றின் முட்டிக் குழியில் வீழ்ந்து

அல்லலுற்று, மேலும் இறைவனை வேண்டி மற்றொரு கண்ணையும் பெற்று இன்புற்றமையான் அறியப்படும்.

இவ்வாறு இவ்விருவரையும் சைவ சமயத்தின் இரு கண்களெனக் கூறவே, 'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' (நான்மணிக்கடிகை) என்றவாறு, இவர் இருவருமே சைவ சமயத்திற்கு ஒப்புயர்வற்ற முதன்மை வாய்ந்த பேராசிரியர் என்பது இனிது பெறப்பட்டது. இங்ஙனம் இவர்களையே இவ்வாறு சேக்கிழார் அறுதியிட்டுக் கூறியது, சைவ சமய ஆசிரியர் நால்வருள் காலத்தாற் பிற்பட்டவராகிய நம்பியாரூரர், "நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலை - சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானை" (திருவலிவலம்) என, 'இவர்களது வாய் மொழிகளே உலகிற்கு உறுதி மொழிகளாக இறைவனால் அளிக்கப்பட்டன' என்பதை உணர்த்து முகத்தான், இவர்களையே ஆசிரியர்களாக வரைந்துணர்த்தினமையான் என்க.

இவ் வாசிரியர்கட்குப்பின் இவர்களது திருவருட் பெருமையை உலகிற்கு உணர்த்துவான் போந்து, இவர்களது நெறியிலே நின்று, இவர்கள் பெருமையோடு ஏனைய அடியார்களது பெருமைகளையும் உலகிற்குணர்த் தினமையான், நம்பியாரூரர் இவர்களோடு உடன்வைத்து எண்ணும் ஆசிரியராக, 'மூவர் முதலிகள்' என்னும் மரபு உளதாயிற்று. பின்னர்த் திருமுறைகள் வகுக்கப்பட்ட காலத்து மூவர்க்கும் முன்னோராய், இறைவன் தானே அருளாசிரியனாய் எழுந்தருளி வந்து ஆட்கொள்ளப் பெற்றுத் திருவருட் செல்வராய்த் திகழ்ந்து, திருதொண்டர்களாகிய உழவர்கள், வழிபாடென்னும் வயலுள் ஊன்றிய அன்பென்னும் வித்து, சிவயோகமாகிய விளைவுண்டாக முளைத்துத் தழைத்து வளர்தற் பொருட்டுத் திருவாசகம் என்னும் பெருமழையைப் பொழிந்த திருவாதவூரடிகளும் உடன் கூட்டப்பட, சைவ சமய ஆசிரியர் நால்வர் ஆயினர். திருமுறைகளை வகுத்தமைத்த பின்னர்ச் செய்யவேண்டுவது ஒன்றின்மையின், சைவ சமயத்திற்கு நால்வர்க்குப் பின் ஆசிரியராக வைக்கப்படுவாரும் இலராயினர் என்க. நால்வர் ஆசிரியரை வைத்தெண்ணும் முறை இது வென்பது, அவர்தம் திருமுறைகளை வைத்துள்ள முறையானே

அறியப்படும். இருவர் ஆசிரியருள் திருஞானசம்பந்தர் முதல்வராயினமைக்குக் காரணம் இது வென்பதனை, "அருட்பெருகு தனிக்கடலும்" என மேலே காட்டிய திருப் பாடலால் உணரவைத்தார் சேக்கிழார் நாயனர். இவை எல்லாவற்றையும் நன்குணர்ந்தே கொற்றவன்குடி உமா பதி சிவாசாரியார். "பூழியர்கோன் வெப்பொழித்த" என்னும் பாடலுள் நால்வரை இம்முறையானே போற்றி செய்தார். இதனானே, நால்வர் ஆசிரியரைச் சிலர் தாம் தாம் வேண்டியவாறே வேறு வேறு முறைப்பட வைத்தல் பொருந்தாமையும் அறிக.

நால்வர் ஆசிரியரை இம்முறையாற் கூறுதல், அவர்தம் அருஞ்செயல்கள் உலகிற்குப் பயன்படு முறைமை பற்றி யன்றி, அவர்தம் தகுதி வேறுபாடு பற்றியன்றாகலான், அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வு கற்பித்தல் குற்றமாத லுணர்க. தீயைச் சார்ந்த இரும்பு அத்தீயேயாயவாறு போல, இறைவனைச் சார்ந்து அவனேயாய் நின்ற நிலைமை யில் நால்வரும் ஒரு தன்மையரே யாயினும், உலகிற்கு உணர்த்தும் முறையால் உணர்த்த வேண்டி இறைவன் அவர்களை இங்ஙனம் முறைப்பட நிற்றற்கு ஏற்றவாறு நிற் பித்ததன்றிப் பிறிதில்லை என்க.

இதுகாறுங் கூறியவாற்றால் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனரும் திருநாவுக்கரசு நாயனரும் ஆகிய இருவருமே சைவ சமயத்திற்கு முதன்மை வாய்ந்த பேராசிரியர் என்பதும், அதனையே, "சைவநெறி தான்பெற்ற புண்ணி யக்கண் இரண்டு" என்னுந் தொடர் விளக்கி நிற்கின்றது என்பதும் தெளிவாயின. "தான் பெற்ற" என்பது, "தனக்கே உரியவாகப் பெற்ற" என அப் பேற்றினது அருமை விளக்கி நின்றது. 'பெற்ற கண்' என இயை யும். 'புண்ணியக் கண்' என்றது, 'புண்ணியத்தாற் கிடைத்த கண்' என்றவாறு. இவற்றானும், அவ்வாசிரியர் கள் பெறலரும் பெருமைப் பேராசிரியர் என்பது விளங்கும்.

இன்ன அருமை பெருமைகள் பலவும் இவ்வாசிரியர் களது திருமுறைகளிற்றாமே உய்த்துணரக் கிடப்பவும், அவற்றை நம்பியாரூரும், நம்பியாண்டார் நம்பிகளும்,

சேக்கிழார் பெருமானும் எடுத்தோதி மேலும் மேலும் விளக்கியிருப்பவும், அவற்றிற்கெல்லாம் செவிகொடாது, சைவ சமயத்திற்கு இவரினும் மேம்பட்ட ஆசிரியர்கள் உளராகவும், இவர்தந் திருமுறைகளினும் மேம்பட்ட நூல்கள் உளவாகவும் கருதி அலமருஞ் சைவர்கள் இருப்பார்களாயின், அவர்களது நிலை மிக மிக இரங்கத்தக்கதேயாம். இருவர் ஆசிரியர்க்கு முன்னர்ச் சைவ சமயத்திற்கு ஆசிரியர் யாவராயினும், நூல்கள் எவையாயினும், அந்நூல்கள் இறைவனாற் செய்யப்பட்டனவும், செய்விக்கப்பட்டனவுமாயினும், 'உலகிற்கு ஊழிகள் பல உளவாகும்' என்னும் முறைமையான், இஞ்ஞான்றை ஊழிக்கு இவர் இருவரையே முதன்மை ஆசிரியராகவும், இவர்தந் திருமுறைகளையே முதன்மை நூலாகவும் வைத்தருளினன் இறைவன் என்பது, மேற்காட்டிய சிறந்த உண்மையுரைகளான் நன்கு விளங்கும். விளங்கவே, அந்நிலைக்கு மாறாக வேறு கூறின், அஃது இறைவன் திருவுளக் குறிப்பிற்கு மாறாமாகலின், அது வினைவழி நிகழுஞ் செயலாய் முடியுமென்க.

இதனால் முன்னை ஆசிரியர்களையும், நூல்களையும் இகழ வேண்டும் என்பது பொருளன்று; மக்கட்கு உறுதி பயக்கும் பொருள்கள் யாவும் இவர்தந் திருமுறைகளிலேயே உள்ளன; இவற்றில் இல்லாத பொருளில்லை என்பதே பொருளாம். இதனை, "பன்மறையோர் செய்தொழிலும் பரமசிவா கமவிதியும் - நன்மறையின் விதிமுழுதும் ஒழிவின்றி நவின்றனையே" என நம்பியாண்டார் நம்பிகள் தமது ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்துள் விளக்கிப் போந்தார். அன்றியும் அவர் ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில், இவ்விருவரும் "கூடிய கூட்டத்தினல் உளதாய்த்து இக்குவலயமே" (பாட்டு-80) என்பதனால், 'இவ்விருவரும் ஒருங்கு தோன்றியதனாலேயே உலகம் உய்தி பெறுவதாயிற்று' என்பதனை நயம்பட அருளிச்செய்தார். அவ்வாறு இவ்விருவருங் கூடிய கூட்டத்தை விளக்குமிடத்தே மேற்காட்டிய உவமைகளையெல்லாம் சேக்கிழார் காட்டியருளினர். அவ்விளக்கத்தினை, மேற்காட்டிய செய்யுளில், 'ஆய்' என்றதன்முன் எஞ்சிநின்ற, 'கூடின' என்னும் பயனிலையை வருவித்து அதனை ஏனைய உவமைகளோடுங்

கூட்டி, எல்லாவற்றையும், 'கூடி' என்றதனோடு முடித்துக் கண்டுகொள்க.

இவ்வாறு சைவ சமயம் இவ்வாசிரியரையும், இவர்தம் திருமுறைகளையுமே பற்றுக்கோடாகக் கொண்டு நிற்றலின் இவர்தம் பெருமைகளையும் இவர்தம் திருமுறைப் பெருமைகளையும் பலவிடத்தும் பலவாற்றானும் பரவச் செய்வதனாலேயே சைவ சமயம் தழைத்தோங்குவதாம். அதனை விடுத்து, இவ்வாசிரியர்தம் முதன்மையையும், இவர்தம் திருமுறைகளின் முதன்மையையும் விளங்க ஒட்டாது மறைத்து, இவரைப் பிறர்வழிப்படுத்தியும், இவர்தந் திருமுறைகளைப் பிறநூல்களின்வழிப்படுத்தியும் அடக்கிப் பின்னிலையின் நிற்கச் செய்யின், சைவ சமயம் தழைத்தோங்குதல் என்பது எஞ்ஞான்றும் இயலாத செயலேயாம்.

ஒரு வட்டத்திற்கு அதன் மையம் அடிநிலையாகும். அதுபோலச் சைவத்திற்கு இவ்விரு பேராசிரியரே அடிநிலையாவர். மையத்தை விடுத்து எவ்வாறு வட்டம் வரைதல் இயலாதோ அவ்வாறே இவ்வாசிரியரை விடுத்துச் சைவத்தை நிலைநிறுத்துதல் இயலாது.

பிறபிற சமயங்கள் இஞ்ஞான்று ஓங்கியும், உலக சமயங்களாயும் நிற்க, ஓங்கும் பொருட்சமய முதற் சைவ நெறி ஒருமூலையில் கேட்பாரற்றுக் கிடக்கக் காரணம் என்னை என்பதனை நாம் கூர்ந்து நோக்குதல் வேண்டும். நோக்கின், பிறபிற சமயத்தவர்கள், அவற்றைச் சொல்லியவர் யாவரோ அவரையும், அவர்தம் வாய்மொழிகளாய் உற்ற நூல்கள் யாவையோ அந்நூல்களையுமே பற்றுக்கோடாகக் கொண்டு அச்சமயங்களை மேற்கொண்டு வருகின்றனர். சைவ சமயமக்களோ சைவத்தைச் சொல்லியவர் யாவரோ அவரையும், அவர் அருளிச்செய்த நூல்கள் எவையோ அவற்றையும் பற்றாது பிற ஆசிரியர்களையும் நூல்களையுமே பற்றித் தம் சமயத்தை மேற்கொள்ள நினைக்கின்றனர் என்பது புலனாகும். 'நால்வர் ஆசிரியர் தாழ்ந்த மக்கட்குரிய ஆசிரியர்' எனவும், 'அவர்தம் திருமுறைகள் அம்மக்கட்கேயுரிய நூல்' எனவும் கொள்ளும் நிலை நினைப்பினும் சொல்லினும் செயலினும் நடைபெறுவதைச் சைவ சமயிகளும் 'முறையானதே' என்றிருப்பராயின், பிற சமயங்கள் வளராது; சைவ சமயம் எங்ஙனம் வளரும்!

இவ்வாசிரியர்கட்கும் இவர்தம் திருமுறைகட்கும் சைவரது இல்லங்களிலும் முதலிடம் இல்லை; கோயில்களி லும் முதலிடம் இல்லை. இவ்வாறாயின் பிற இடங்களில் இடம் உண்டாதல் எவ்வாறு? இவர்தம் திருநாட்களாய் வரும் நன்னாட்களைச் சைவக் குடும்பத்தினர் தாமே அறி யார்; கோயில்களிலும் சிலவிடத்தன்றிப் பலவிடத்துக் கொண்டாடப்படுதல் இல்லை. கொண்டாடப்படும் இடங் களினும் கொண்டாடும் இடங்களிலும் சிலரையன்றிப் பலரைக் காணுதல் அரிது. சைவ சமயம் வளரவேண்டு மாயின் இவர்தம் திருநாட்கள் நாடெங்கணும் பெருவிழா வாகக் கொண்டாடப்படுதல் வேண்டும்; அந்நாட்களிலும் பிறநாட்களிலும் இவர்தம் பெருமைகளையும் இவர்தம் திரு முறைப் பெருமைகளையும் பலரும் அறியும் வண்ணம் பல வாற்றானும் எடுத்துரைத்தல் வேண்டும். அவை எல்லா வற்றிற்கும் முதன்மையாகச் சைவ சமயத்திற் பற்றுள்ள அனைவரும் அன்றாட நிகழ்ச்சிகளிலும், சிறப்பு நிகழ்ச்சிகளி லும் இவர்தம் திருமுறைகளையே கைக்கொண்டொழுகுதல் வேண்டும்.

இதனைச் சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜம் ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு முன்பே உணர்ந்து தீர்மானம் நிறைவேற்றிச் செயலிலும் இயன்றவரை செய்து வருகின்றது. எனினும், மேற்சொல்லிய முறை களில் இன்னும் வேண்டும் அளவிற்கு நிரம்பச் செய்து, இவ்வாசிரியர் தம் பெருமைகளையும் திருமுறைகளின் பெருமைகளையும் உலகம் அறியச் செய்யுமாயின், பெருநலம் பயப்பதாகும்; அதற்குத் திருவருள் முன் னிற்பதாகுக.

“ மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே.

திருச்சிற்றம்பலம்

---

# சைவ சித்தாந்தக் கல்லூரி அமைப்பு —

## சில சிந்தனைகள்

## (My idea of a Saiva Siddhanta University)

(ராவ்சாகிப் - நல். முருகேச முதலியார், பி.ஏ.)

சமயக் கல்வியைப் பரப்ப வேண்டுமென்ற நோக்கத்தில் சைவ சித்தாந்தக் கல்லூரி ஒன்று அமைக்க வேண்டுமென்ற எண்ணம் தற்போது நிலவுவது மிகப் போற்றற்பாலது. அத்தகைய கல்லூரியின் அமைப்பைப்பற்றி ஆராய எழுந்தது இக் கட்டுரை.

குறிக்கோள்கள் :—ஒரு நூலுக்கு யாப்பு (சம்பந்தம்), பொருள் (விஷயம்), கேட்போர் (அதிகாரி), பயன் (பிரயோஜனம்) என்ற நால்வகைக் குறிக்கோள்கள் எங்ஙனம் உள்ளனவோ அதுபோல் ஒரு கல்லூரியின் குறிக்கோள்களைச் சிந்தித்தல் அவசியம். எப்படி ஒரு நூலின் பயன் அதை ஆக்கியோன் தகுதியையும் படிப்போர் தகுதியையும் பொறுத்ததோ அதுபோல் ஒரு கல்லூரியின் பயன் பயிலுவிக்கும் ஆசிரியர்களையும் பயிலும் மாணவர்களையும் பொறுத்ததாகும்.

முதலாவதாகப் பயனை நோக்குமிடத்து, இக் கல்லூரியில் அளிக்கப்படும் சைவ சித்தாந்த ஞானம் பல்கலைகளில் ஒன்றாக இருத்தல் சாலுமா அல்லது பூரணமாகச் சைவ சித்தாந்தமும் அதைச் சார்ந்த படிப்புகளுமாக இருத்தல் தகுதியல்லவா என்பதை முடிவுகட்டவேண்டும். பல்கலைகளில் ஒன்றாயிருந்தால் போதும் என்று கருதினால், சைவ சித்தாந்தத்தைத் தற்போது உள்ள கல்லூரிகளில் பி.ஏ. பாடதிட்டங்களில் ஒன்றாகப் பெருவாரியாகச்சேர்க்கப்பட்டால் போதும். அதற்கென்று தனிக் கல்லூரி தேவையிருக்காது. இரண்டொரு கல்லூரிகளில் ஏற்கெனவே தத்துவத்துறைத் திட்டத்தில் 'சித்தாந்தம்' சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் இந்த ஏற்பாடு நல்ல பயனை அளிப்பதாகத் தெரியவில்லை. பிழைப்புக்காகப் படிக்கப்படும் பாடத் திட்டத்தில் ஒரு சிறிது மட்டும் சித்தாந்த அறிவை நல்குவோமானால் அது கொண்ட குறிக்கோளை நிறைவேற்றாது. பிழைப்புக்குக்

கூட அது பயன் தருகிறதோ என்று சந்தேகிக்கவேண்டி யிருக்கிறது. ஏனெனில் பி.ஏ. வகுப்பில் படிக்கும் சித்தாந்தப் படிப்பு சாதாரண ஆசிரியர் தொழில் படிப்புக்குக்கூட உதவுவது இல்லை. பள்ளி வகுப்புகளில் வரலாறு, பூமி சாத்திரம் முதலியவைகள்போல் தத்துவம் கற்பிக்கப்படுவ தில்லை. எனவே, பல்கலைகளில் ஒன்றுகச் சித்தாந்தம் படிக்கவோ அல்லது சாதாரணக் கல்லூரிகளில் தத்துவ ஆசிரியராகவோ, இப்போது இருக்கும் எம்.ஏ. வகுப்பிலோ அல்லது பல்கலைக் கழகத்தில் தத்துவத் துறையிலோ சேர்ந்து சித்தாந்தத்தைச் சிறப்புப் பாடமாகவோ ஆராய்ச்சிப் பாடமாகவோ பயிலலாம். இந்த முறையில் தற்போது வசதிகள் குறைவாயிருந்தாலும், அதைப் பெருக்க வழிகள் தேடுவது ஆகாத காரியமல்ல. அவைகள் சாதாரணமாகச் செய்யக்கூடியவைகளே. ஆனல் அவை ஒரு புது உணர்ச்சியையோ அல்லது கிளர்ச்சியையோ உண்டாக்குவது ஆகாது. சைவ சித்தாந்தத்தை வளர்ப்பதற்கு இது தலையாய வழியாகாது. ஒரு துணைவழி என்றே கருதவேண்டும். எனவே சித்தாந்தத்துக்கு ஒரு தனிக்கல்லூரி தேவையென்பது நன்கு புலனுகும். முதல் தேவை இது. மற்றவை துணைத் தேவைகள். ஒன்றைவிட்டு ஒன்றை மட்டும் கைக்கொள்வது பலன்தராது. எனவே இருவேறு வகைகளையும் ஈண்டு ஆராய்வோம்.

## I தனிக் கல்லூரியின் இலக்கணம்

(a) ஆசிரியர்கள் : தனிக்கல்லூரி சமயக்கல்லூரியாகத் தான் இருத்தல் கூடும். இது தியலாஜிகல் காலேஜ் என்ற இனத்தில் சேரும். அத்தகைய கல்லூரி முதன்மையாக ஆசிரியர்களைத் தயாரிக்கும். சமயப்படிப்பு தக்க ஆசிரியர்களின்றித் தர இயலாது. சாதாரண கிறிஸ்தவ கல்லூரிகளுக்கு ஆசிரியர்கள் தயாரிப்பு தியலாஜிகல் செமினரிகளில்தான் நடக்கிறது. அத்தகைய பாதிரிமார்களுடன் ஊதியத்துக்குச் சில ஆசிரியர்களையும் சேர்க்கிறுர்கள். எனவே ஆசிரியர்கள் தயாரிப்பின்றிச் சித்தாந்தக் கல்லூரியை நல்ல முறையில் துவக்க முடியாது. அத்தகைய ஆசிரியர்கள் துறவிகளா யிருந்தால் நலம். அவர்கள் சைவ மடங்களில் தயாரிக்கப்படவேண்டும். நல்ல படிப்பும் பண்பும்

வாய்ந்தவர்களுக்குச் சன்னியாசம் தந்து குறைந்தது ஐந் தாண்டுகளுக்குச் சித்தாந்தப் பயிற்சிதந்து ஆசிரியர் தொண் டுக்கே அர்ப்பணம் செய்யவேண்டும். இவ்வகை ஆசிரி யர்கள் புதுத் தம்பிரான்மார்கள் வர்க்கம் என்று சொல்ல லாம். இவர்களை இளமையிலேயே தேர்ந்தெடுத்துத் தக்க சித்தாந்திகளிடம் (இல்லறத்தாராயினும் சரி, துறவிகளா யினும் சரி) சித்தாந்தப் பயிற்சிக்கு மடங்களிலேயே ஏற் பாடு செய்யவேண்டும். (ரோமன் கத்தோலிக் ஆசிரியப் பாதிரிமார்கள் மடங்களில்தான் - மொனஸ்டரிகளில் - தயா ரிக்கப் படுகிறார்கள்). இத்தகைய சித்தாந்த ஆசிரியர்க ளாகப் போகும் இளந் துறவிகள் 'தீக்கை பெற்றுச் சிவாகமங்களை யோதி, அதன் பின்னர் சரியாபாத முதலிய வற்றை ஆராயு நூல்களை முறையே கேட்டு, அவ்வாறொழுகி, மனத் தூயராய், நித்தியா நித்திய வுணர்வு தோன்றிப் பிற விக் கஞ்சி, வீடுபேற்றின் அவா மிக்குடையராய்' சிவஞான போதம் முதலான சித்தாந்த சாத்திரங்களை முறையேகற்று, கேட்டுத் தெளிவுபெறுதல் வேண்டும். இது மாபாடிய கர்த்தா சிவஞானமுனிவர் குறிப்பிட்டுள்ள விதி. இவ்விதம் ஐந்தாண்டுகள் பயிற்சி பெற்றவுடன் தனி சித்தாந்தக் கல் லூரிகளுக்கு இவர்களை ஆசிரியர்களாக அமைக்கவேண்டும். இவர்களில் சிலர் மடங்களிலேயே இருந்துகொண்டு புதி தாகச்சேரும் இளந்துறவிகளுக்குச் சித்தாந்தம் பயிலுவிக்க வேண்டும். இந்த இளந் துறவிகள் எதிர்காலச் சித்தாந்த ஆசிரியர்களாவார்கள். (உடனடியாகக் கல்லூரியைத் துவக்குவதற்குக் கிடைக்கக்கூடிய அறிஞர்களைக்கொண்டு துவக்கலாம். ஆனால் தொடர்ச்சியாக நல்ல முறையில் நடத்த மேற்குறிப்பிட்ட திட்டம் இன்றியமையாததாகும்.)

(b) மாணவர்கள் :—இத்தகைய தனிக் கல்லூரியில் பயி லும் மாணவர்களை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம் :— (1) இவர்கள் சிலர் எதிர்காலச் சித்தாந்த ஆசிரியர்களாக வேண்டும். (2) இவர்களில் பலர் சைவசித்தாந்தத்தைப் பிர சாரம் செய்வதற்கு வேண்டிய பணிகளை மேற்கொள்வதல் லாமல், ஆராய்ச்சி, நூல்வெளியிடுதல், அச்சக வேலைபார்த் தல், இரவுப் பள்ளி, வெள்ள நிவாரணம் முதலிய சமூக நலப்பணிகள் முதலியன செய்தல்வேண்டும். (முன் ஆச்சிர மத்தில்சிலர் வைத்தியப்படிப்புப் பெற்றிருந்தால்,ஆஸ்பத்திரி

முதலிய வேலைகளுக்கு உபயோகப்படுத்திக்கொள்ளலாம்.) ஓரியண்டல் காலேஜ் முதலிய கல்வி நிலையங்களில் தற்போது கல்விபெறும் சில மாணவர்கள் இத்தகைய இளந் துறவிகளாகிச் சித்தாந்த ஆசிரியர்களாகப் பணிபுரிய முன் வரவேண்டும். இவர்களைப் பொறுத்தமட்டில் சடங்குகளைக் குறைத்துச் சித்தாந்தப் படிப்பையும் ஒழுக்கத்தையும் அதிகமாக வற்புறுத்தல் வேண்டும். (ஸ்ரீ ராமகிருஷ்ணமட வித்தியாலயங்களில் நூற்றுக்கணக்கான பேர்கள் கல்வி நலம் பெற்றாலும் தமிழர்களில் ஒரு சிலர்கூட சன்னியாசம் பெற்று மடத்துக்குப்பணிசெய்ய முன்வருவதில்லை யென்றும், வெளியார்களே—பெரும்பாலும் வங்க சகோதரர்களே—துறவுபூண்டு மடத்தின் பணிகளை நடத்துகிறார்கள் என்றும் கேள்விப்படுகிறோம். இம்மாதிரி குறை சைவமடங்களில் பயிலும் மாணவர்களிடத்திலும் அதிகமாக உள்ளது. இதைத் தீர்த்தல் நலமாகும்). இம் மாணவர்களில் சிலர் (noviates)சாதாரண கல்லூரிகளில் எம்.ஏ. முதலிய வகுப்புகளில் சேர்ந்து உயர்தரக் கல்வியையும் பெறலாம். பெரும்பாலோர் சித்தாந்தக் கல்லூரிக்கும், மடத்தைச் சேர்ந்த பல்வேறு பணிகளுக்குமே பயனாகவேண்டும். நாளடைவில் இவர்களில் சிலர் பிற நாடுகளுக்குப் போய்ச் சித்தாந்த நிலையங்களை (Siddhanta centres) ஏற்படுத்தலாம்.

எல்லோருமே துறவிகளாக இயலாததாலும், அது தேவையில்லாமையினாலும், துறவிகளாகாத எஞ்சியவர்கள் சுத்த சைவ சித்தாந்திகளாக இல்லறத்திலிருந்துகொண்டு சித்தாந்தத்தை வாழ்க்கை முறையானும், போதக முறையானும் விளக்கவேண்டும். சித்தாந்தக் கல்லூரி ஒரு சுடர் விளக்கு. அதிலிருந்து பல விளக்குகள் ஒளிபெற வேண்டும்.

இத்தகைய தனிக் கல்லூரி வைதிக சைவ சித்தாந்தத்துக்குத் தாயகமாக இருக்கும்.

## II பிற கல்லூரிகள்

இக் கட்டுரையின் துவக்கத்தில் கண்டுள்ளபடி சைவ சித்தாந்தத்தை பி.யூ.சி., பி.ஏ., எம்.ஏ., பாட திட்டங்களில் சேர்க்க நடவடிக்கை எடுத்தால் பலரும் சைவ சித்தாந்தத்தைப் பயில வாய்ப்புக் கிடைக்கும். பல்கலைக் கழகங்களில் எம்லிட்., பி.எச்.டி., டிலிட்., பட்டங்களுக்குச் சைவ

சித்தாந்த ஆராய்ச்சி எடுத்துக் கொள்வதற்கு மாணவர் களுக்குப் பண உதவிசெய்ய ஏற்பாடுகள் செய்யலாம். பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்தச் சிறப்புச் சொற் பொழிவுகள் செய்யவும் பணம் ஒதுக்கி வைக்கலாம். வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களுக்கு நம் செலவிலேயே சித்தாந்த ஆசிரியர்களைக் குறித்த காலத்துக்கு உதவலாம். (அமெரிக்காவிலுள்ள) சிகாகோ பல்கலைக் கழகத்துக்கு ஒரு சித்தாந்தப் பேராசிரியர் தேவையிருந்ததென்றும், ஒரு வரை நம்மால் அனுப்பக் கூடவில்லையென்றும் இலங்கை உயர்திரு. நடேச பிள்ளை கூறக் கேட்டுள்ளோம்). பிற கல்லூரிகளில் சைவ சித்தாந்தப் பயிற்சி ஏற்படுவதின் முக்கிய பயன் பிற தத்துவங்களுடன் படித்துத் தாரதம்மி யங்களை எடுத்துக்காட்ட வாய்ப்பைத் தரக் கூடியதாகும். இவ்விதம் ஒத்துப்பார்க்கும் முறையில்தான் சித்தாந்தத்தின் சிறப்பு நம்மவர்களுக்கும் அந்நியர்களுக்கும் நன்கு புலப் படும்.

## III பாட திட்டம்

இதைப்பற்றி விரிவாக எழுதப்புகின் ஒரு பெரிய கட்டுரையாய்விடும். ஒரு குறுகிய வரைவுத் திட்டம் மட்டும் ஈண்டுக் குறிக்கப்படும். இது டாக்டர் வி. எ. தேவ சேனபதி, சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத்துறைத் துணைப் பேராசிரியர் அவர்களுடன் சில மாதங்களுக்கு முன் சேர்ந்து சிந்தித்தபோது உருவானது. (ஆனல் இக் கட்டுரையில் வெளியிட்டுள்ள கருத்துக்களுக்கு அவர் உத்தரவாதம் இல்லை. எழுதுபவரையே சாரும்.) ஒரு ஆலோசனைக்குழு ஏற்படுத்திக் கூட்டுவன குறைப்பன செய்து பூர்த்திசெய்து கொள்ளலாம். முக்கிய குறிக் கோள் என்னவெனின் தனி சைவ சித்தாந்தக் கல்லூரியில் ஆசிரியர்களும் மாணவர்களும் சைவசித்தாந்தத்தைத் தக்க முறையில் ஆழ்ந்து படிக்கவேண்டும். அதுமட்டு மன்றி நம் நாட்டு பிரதர்சனங்களைப் பற்றியும், மேனாட்டுத் தத்து வங்களைப் பற்றியும் (கம்பாரடிவ் பிலாசபி) போதுமான அறிவைப் பெறல்வேண்டும். இன்னும் சைவ சித்தாந்தத் திற்கே சிறப்பாக அமைந்திருக்கும் சைவத் திருமுறைகள், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம்

முதலியவற்றை நன்கு கற்கவேண்டும். கிடைக்கக்கூடிய ஆகமங்களையும், கோயில், மடம் சிவபூசை முதலிய வழி பாட்டு முறைகளையும் நன்கு அறியவேண்டும். அளவை, மனோதத்துவம், சாத்திர வரலாறு இவைகள் முக்கியமாக இடம்பெறல்வேண்டும். (சர். ராதாகிருஷ்ணன் சமயக்கல்வி யாதாஸ்தில் சமயக்கல்வி சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிவதிலிருந்து தொடங்கவேண்டுமென்பதை சர். ரிச்சர்ட் லிவிங்க்ஸ்டன் என்ற மேல்நாட்டு அறிஞர் பாராட்டியுள்ளதாகத்தெரிகிறது. எனவே,பெரியபுராணம் ஆரம்பப் படிப்புத் திட்டத்தில் பெரிய இடம்பெறல் வேண்டும்). சித்தாந்த சாத்திரங்களை முழுதும் படித்தல்வேண்டும். ஸ்ரீகண்ட பாடியம் முதலியவைகளைப் படித்தறிவதற்குப் போதுமான வடமொழிப் பயிற்சியையும் தொடர்ந்து அளித்தல் வேண்டும். பிற்காலத்தில் மாணவர்கள் இந்த வடமொழிப் பயிற்சியைத் தாமாக விருத்தி செய்து கொள்ளலாம். சிவஞான போத மாபாடியம், சித்தியார் அறுவர் உரைகள் முதலிய வியாக்கியான நூல்களை நன்கு பயிலல்வேண்டும். திருக்குறளும் படித்தல் வேண்டும்.

தனிக்கல்லூரி மூன்றாண்டுப் படிப்புத் திட்டத்துக்குப் பின்வரும் பாட அமைப்பு பொருந்தும் :—

**முதல் ஆண்டு :**—சிவப்பிரகாசம், திருமுறைகள், திருக்குறள், அளவை, நம்நாட்டு மேல்நாட்டுத் தத்துவங்கள். மற்ற தத்துவப் பாடங்கள் தற்போது சென்னைப் பல்கலைக் கழக B A. மேஜர் தத்துவத்துறைப்பாட திட்டத்தை ஏறக் குறையப் பூராவும் அமைத்துக் கொள்ளலாம். (இவைகளைப் பல்கலைக் கழகக் காலண்டரில் கண்டு கொள்க).

**இரண்டாம் ஆண்டு :** சிவஞானபோதம், மற்ற சித்தாந்த சாத்திரங்கள், மாபாடியம், திருமந்திரம், ஆகமங்கள். மற்ற தத்துவப் பாடங்கள் B.A. மைனர் பாடதிட்டங்களை ஏறக் குறையப் பூராவும் அமைத்துக்கொள்ளலாம். (விவரங்களைப் பல்கலைக்கழகக் காலண்டரில் கண்டு கொள்க).

**மூன்றாம் ஆண்டு :** சிவஞான சித்தியார் சுபக்கம், பரபக்கம், அறுவர் உரைகள், சைவ உபநிடதங்கள் (ஸ்வேதாஸ்வதரம்), பிரம்ம சூத்திரங்கள். தற்போது M.A. பாட திட்டத்தில் சைவ சித்தாந்தச் சிறப்புப் பகுதிக்கு விதித்துள்ள

மற்றைய பாடங்களை ஏறக்குறையப் பூராவும் அமைத்துக் கொள்ளலாம். (விவரங்கள் அநுபந்தத்தில் காட்டியுள்ளது).

## IV. பட்டங்கள்

(a) தனிக் கல்லூரி மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும்: (1) சித்தாந்தி; (2) சித்தாந்த ஆசிரியர்; (3) சித்தாந்தப் பேராசிரியர் போன்ற பட்டங்கள் தரலாம். இவைகளைப் பல்கலைக் கழகங்கள் ஏற்றுக் கொண்டால் நலம். இல்லையென்றால் குறைவதொன்றுமில்லை. முதலில் சில ஆண்டுகளுக்கு இந்தத் தனிக் கல்லூரி பல்கலைக் கழகங்களில் இணைக்கப்படவேண்டுமென்ற அவசியம் இல்லை. (இந்தப் பயிற்சிகளும் பட்டங்களும் பிழைப்புக்காக அமைக்கப்பட்டவை அல்ல). இதைப்பற்றிப் பின்னல் யோசிக்கலாம். ஆரம்பத்தில் கட்டுப்பாடுகள் அதிகமிருந்தால் திட்டம் உயிர்ப்பும், பொலிவும் பெறாது.

(b) பிற கல்லூரிகளில்—வழக்கம்போல் எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி., டி.லிட்., முதலிய பட்டங்களைச் சைவ சித்தாந்தத்தில் சிறப்பாகப் பெறலாம். இது பால் மருந்தும் உணவுமாவதுபோல், சமய வாழ்வுக்கும், பிழைப்புக்கும் பலன் தரும்.

## V. கல்லூரிக் கட்டிடம் முதலியன

கல்லூரிக்குத் தனிக்கட்டிடம் இல்லாவிட்டாலும், ஒரு புத்தகப் பண்டாரம் (லைப்ரரி) தேவை. அதில் சைவ சித்தாந்தத்தைப் பற்றி எந்த மொழியிலிருந்தாலும் அத்தனை நூல்களும் கிடைக்கவேண்டும். மற்றைய தத்துவங்களைப் பற்றிய தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்களும் இருக்கவேண்டும். பன்மொழி கற்ற சித்தாந்த அறிஞர் பண்டாரத்துக்குக் காப்பாளராக இருக்கவேண்டும். அவர் கல்லூரி முதல்வருக்கு அடுத்த படியாக மாணவர்களுக்கு உதவி புரியவேண்டும்.

முடிவு:—மேற் குறித்த திட்டம் ஓர் உருவக் குறிப்பு (அவுட்லைன் அல்லது பிளூபிரின்ட்) என்ற முறையில்தான் வரையப்பட்டிருக்கிறது. ஆனல் முக்கிய அம்சங்களை ஞாபகப்படுத்துகிறது. அவைகளை ஒரு சாராரும் புறக்கணிக்க இயலாது. அவை அடிப்படையானவை. பேரளவில்

கல்லூரி ஏற்படுத்தினுல் பயன் தராது. வெற்றிகரமாகவும் முடியாது. இக்கல்லூரி நல்லமுறையில் தொழிற் பட்டால் அது சைவ சித்தாந்தச் சிறப்பை எதிர்காலத்தில் மங்காமல் விளக்கும் என்பதில் ஐயமில்லை. நாளடைவில் அது சைவசித் தாந்தப் பல்கலைக்கழகமாகவும் மாறிவிடும். இதற்குச் சைவர் கள் யாவரும் கூடி உழைத்தல் கடமையாகும். முக்கிய மாகச் சில நல்ல சைவக் குடும்பங்களில் தேர்ந்தெடுத்த ஒரு மகனையாவது சித்தாந்த வாழ்வுக்கும் உழைப்புக்கும் மேற் குறிப்பிட்டுள்ள முறையில் அர்ப்பணம் செய்யவேண்டும். பணம் பதவிகள் மற்றவர்கள் தேடலாம். ஒரு சிலராவது இந்தப் புது வர்க்கத் துறவு வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.

நமது முழுமுதற் கடவுளாகிய சிவபிரானும், அற்புத சமய, சந்தானகுரவர்களும் உடனிருந்து இந்த நல்ல பணிக்கு வழி வகுக்கத் தோன்ருத்துணையாக இருப்பார்க ளாக !

<u>அநுபந்தம்</u>

## *Syllabus for Saiva Siddhanta as an optional for the new M.A. Degree in Madras University*

**I. History :**

A. Traces of 'Saivism' in the Rig Veda, the Yajur Veda and the Atharvana Veda. The ideas of Rudra-Pasupati and Stamba worship.

B. 1. Development of Siddhantic thought or theism in—

(a) The Upanishads, especially the Svetas-vatara.

(b) Formulation of the system as indicated in the Bhasya on the Brahma Sutras by Nilakanta Sivacarya.

(c) Kashmir Saivism—the development of the Pratyabhigna system.

(d) Vira Saivism.

2. Ancient Tamil literature.—

(a) Traces of Saivite thought in the Tholkappiyam and Sangam literature.

(b) Devotional literature of the Samayacaryas and Nayanmars.

(c) Philosophical literature of the Santanacaryas.

C. Systematization of worship in the Agamas.

**II. Theory of knowledge :**

Pramanas—Sense perception. Reasoning and Authority. Para and apara vidyas. Theories of Truth and Error. (Prama and Bhrama).

**III. Metaphysics :**

The three ultimate realities : Pati, Pasu and Pasa. Satkaryavada. The idea of causation. Criticism of other theories. Conception of God. Siva and Sakti. God as the efficient cause. Attributes of Siva and Sakti.

(a) Nature of Pati—Criticism of Nirgunavada. Divine motherhood and the redemptive principle of Grace. Criticism of the doctrine of Avatara.

(b) Nature of Pasu—Saiva Siddhanta psychology-Plurality of souls-Characteristics of the Soul, its relation to God—Soul as sadasat—Classification of the Soul's avasthas.

(c) Nature of Pasa. The threefold character—anava, maya and karma—the thirty six tattvas and their relation to the soul.

(d) Elements of realism and idealism in the Siddhanta.

**IV. Ethics and Religion :**

(a) The highest Purusartha : Mukti or Redemption.

(b) Means of attaining salvation. (Carya, Kriya, Yoga, Gnana, Diksa).

(c) The meaning of moral and spiritual endeavour—karma and redemption.

(d) The nature of Mukti—Atma darsana and Sivadarsana. Comparison with the concept of mukti in other darsanas.

**Courses of Reading Suggested:—**

Sivagnana Bodham—with the Bhasya of Sivagnana Swamigal.

Sivagnana Siddhiyar.

Works of Umapathi Sivacarya.

Gnanamritham and Siddhanta Saravali.

Srikantha's Bhasya on the Vedanta-Sutras with Appaya Diksita's Sivarkamani Dipika.

Thevaram, Tiruvachagam, Tirumandiram.

Sivattava Vivekam.

Kashmir Saivism. Abhinava Gupta's works; also books on the subject written by Leidecker and Chatterjee.

Woodroffe: Sakti and Sakta.

Suryanarayana Sastri.—His article in the Cultural Heritage of India, Volume V.

Paranjoti: Saiva Siddhanta.

John Piet: A Logical Presentation of Saiva Siddhanta.

V. A. Devasenapathi—Saiva Siddhanta.

C. Hayavadana Rao (Ed.) Srikara Bhasya.

C. V. Narayana Iyer: Saivism in South India.

Article in 'A History of Philosophy'—'Eastern and Western' and the sections on 'Saivism' in the Bharatiya Vidya Bhavan volumes.

——

# அப்பர் தேவாரம்

(மா. ப. தியாகராஜன், பி.ஏ.)

சிந்திப்பார் மனத்தான் சிவன் செஞ்சுடர்
அந்திவான் நிறத்தான் அணியார் மதி
முந்திச் சூடிய முக்கண்ணி னானடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே.

சிவன் இன்ன தன்மையன் என்றுணர்த்துமுகத்தான் அமைந்துள்ள மேற்படி தேவாரம் மனனத்திற்குகந்த பாடலாகும். ஏனெனில் அப்பாடலின் கருத்து சிந்தனைக்குகந்ததாகும். சிந்தனைக் கேற்றபடியே மனத்தில் எண்ணங்களெழும். எண்ணங்களின் எழுச்சி எத்தன்மையதோ அத்தன்மைய சூழ்நிலைகளமையும். சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறே சுக துக்கங்களமையும். ஆறு போன்றது மனம். ஆற்றிலோடும் நீர் போன்றதே எண்ண எழுச்சிகள். ஆற்றின் கரைகளை யொத்தது சூழ்நிலைகள். ஆற்றில் தூய நீரோடிக்கொண்டிருக்குமே யானால் அவ்வாற்றின் கரையில் வாழ்பவர்களும் நல்ல வளமும் பண்புமுடையவர்களாவர். தேவாரப்பாடல்கள் அனைத்தும் மனத்தூய்மையைத் தரவல்லனவேயாம். அவைகள் நமக்கெனச் சேமநிதியாகத் தந்தனவாகும். அப்படித் தந்துதவிய நமது பரம சமயாசாரியர்களை நாம் என்னென்று வழிபடுவோம்? "புகழுமா றென்றறியேன்" என்று தான் கூற வேண்டும். அவைகளை நல்ல முறையில் நாம் பயன்படுத்தினால் அதுவே அவர்களுக்கு நாம் செய்த ஒரு பெரிய பரிசாகும். இப்பாடலமைந்த பதிகத்தை எவ்வாறு பயன் படுத்தலாமென்று பின்னர் விளக்குவாம்.

சிவன் எனும் நாமம் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானையே குறிக்கும். அப்பெயரின் சிறந்த பொருள் நன்மை, இன்பம் அன்பு மங்களம் எனப்படும். எனவே நன்மையையே சிந்திக்கும் மனம் சிவபெருமானிருக்கப் பட்ட கோயிலாக அமையும்.

"சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி அம்மான்"

—அப்பர் தேவாரம்.

"பொய் சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி"

—போற்றித் திருத்தாண்டகம்

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே."

அப்படிப்பட்ட சிவபெருமானை வணங்கி வழிபடும் சிலருக்கு அல்லல் ஏற்படுவதுமுண்டு. அவ்வழிபாட்டினல் அல்லலேற்படுகிறதென்று எண்ணுவது கூடாது. மனம் தூய்மையாதற் பொருட்டு நிகழும் சில இடர்ப்பாடுகள் இயல்பாக நேரக்கூடியனவேயாகும். பாசிபடிந்த நீர் நிலைகளைச் சுத்தம் செய்யும்போது துர் நாற்றம் அடிக்குமல்லவா? அது சகிக்க முடியாதிருப்பினும் அந்த இடம் சுத்தமானபின் நன்மையேற்படும். அதேபோல் சிவபெருமானைப் பாடிப் பரவுதலால் மனத்தூய்மை ஏற்படும். சமயம் தீய எண்ணங்களின் முனைப்பை நீக்கும்போது நம்முடைய சூழல்களும் மாற்றப்படும். அம்மாற்றம் நமக்குத் துன்பத்தைப் பயப்பது போன்றிருப்பினும் நன்மைக்காகவே நிகழ்வதென உணர்தல் வேண்டும்.

எனவே, "செஞ்சுடர்" என்று சிவன் போற்றப்படுகிறன். செம்மையைச் செய்யும் சுடர். செம்மையைச் செய்து விளக்கத்தைக் கொடுப்பது செஞ்சுடர் ஆகும். அந்திப் போதில் காணப்படும் செஞ்சுடர் சிவனது முன்பக்கத்தையும், மாலைச் சந்திப்போதில் காணும் வானத்தின் செந்நிறம் தாழ்சடையின் பொன்வண்ணத்தையும் நினைப்பூட்டும். இயற்கைக் காட்சிகளைக் காண்பதை ஒரு குளிர்ச்சியாக எண்ணுவது இயல்பு. "கண் குளிரக் காணுதல்" என்று கூறுவது போன்று அமையும்.

காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்குருவே போலும் சடைக்கற்றை மற்றவர்க்கு
வீங்கிருளே போலும் மிடறு —அற்புதத் திருவந்தாதி

மாலை யெழுந்த மதியே போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி —போற்றித் திருத்தாண்டகம்

அணியார் மதி என்பது உயிர்களைக் குறிக்கும். போற்றத்தக்க உயிர்கள் உய்யும் பொருட்டு, அவற்றைச் சிரசிலே தாங்குகிறான். "தலையாலே தாங்குகிறான்" என்று கூறும் சொற்றொடர் என்ன கருத்தை உணர்த்துகிறதோ அதேபோல் மதியைச் சிவன் சடையில் தாங்குகிறான் என்பதும் அமையும். முந்திச்சூடிய முதல்வன் என்றதனால், உயிர்கள் தனுகரணங்களைப் பெறுவதற்கு முன்னரே சிவபெருமானால் தாங்கப்படுகின்றன என்று பெறப்படும். "என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ" என்று கூறுதல் காண்க.

விநாயகர் உமாதேவி முதலியவர்களும் முக்கண் படைப்புடையவர்களெனினும் முக்கண்ணினன் என்பது சிவபெருமானுக்கே சிறப்புடைய பெயராகும். முக்கண்கள் சூரியன், சந்திரன் அக்னி யென்று கூறுவர். அவை அன்பு அறிவு ஆற்றலையும் குறிக்கும். சிறப்பு வகையில் இச்சா, ஞான, கிரியை யாகிய முச்சக்திகளையும் குறிக்கும். அவனுடைய திருவடிகளை வணங்குபவர்கள் வானுலகாள்வரே.

ஆளுதல் என்பதும், அடிமை யென்பதும் சிறந்த சொற்களாக எண்ணாமல், ஆளுதல் என்பது உரிமையைப் பறித்தல் என்றும், அடிமை யென்பது உரிமையை இழத்தலென்றும் பொருள் கொள்ளுதல் வழக்கில் வந்து விட்டது. ஆளுதல் என்பது பேணுதல் என்ற பொருளிலும், அடிமை யென்பது தம்முடைய சுகதுக்கங்களைப் பாதுகாக்கும் பொறுப்பைப் பிறரிடத்தில் அற்பணித்தல் என்ற பொருளிலும் கொள்வது, இறைவனுக் கடிமையாதலைக் குறிப்பிடும். இறைவன் ஆண்டான், நாம் அடிமை என்று பாவித்தலை நல்ல பொருளில் கொள்ளல் வேண்டும். வானுலகம் என்பது சிவபதத்தைக் குறிக்கும்.

இப்பாடலின் முதலடியில் சி ஆரம்பமாகிறது. நான்காமடியின் ஆரம்பமும் வ என உள்ளது. இடையிரண்டு அடிகளின் முதலெழுத்துக்கள் அ, உ, ம் எனப் பிரணவத்தை உணர்த்துகின்றன. எனவே ஐந்தெழுத்தில் பிரணவம் ஒடுக்கமெனக் காட்டப்படுகிறது. முதல் வரியின் மூன்றும் சீர்க்கண் சிவன் என்னும் சொல்லே அமைந்துள்ளது.

மற்று இப்பதிகம் 31 பாடல்களையுடையதாதலானும் அகர வரிசையில் பாடப்பட்டிருத்தலானும் ஒவ்வொரு மாதமும், முதல்நாள் "அண்டமார்" எனத் தொடங்கும் முதற் பாடல்; இரண்டாம்நாள் அதற்கடுத்த பாடலாக 31 நாட்களும் முறையே ஓதிவரின், இன்ன பாடல் ஓதும் நாள் இன்ன தேதி யென்று தெரிந்துவிடும். அன்று ஒரு சுப காரியம் துவங்கவேண்டு மெனினும், சொற்பொழிவாற்ற வேண்டு மெனினும் அன்றைய பாடலைச்சொல்லித் துவக்க லாம். இவ்வாறு இப்பதிகத்தை அன்றாட வாழ்க்கையி லமைத்துப் பயன் படுத்திக் கொள்ளலாம். மேலும், "சிந் திப்பார்" எனத் தொடங்கும் திருப்பாட்டைக் காப்புத் திருப்பாட்டாக முதலில் ஓதிக்கொள்ள வேண்டும். விடி வதுமே வெண்ணீறு மெய்யிற்பூசி இக்காப்புச் செய்யுளைப் பாடி அன்றைய பாடலை ஓதி யெழுவது நல்ல சைவ ஒழுக்க மாகும்.

---

# சில தடைகளும் விடைகளும்

(முரு. பழ. இரத்தினம் செட்டியார்)

இறை, உயிர், தளை ஆகிய முப்பொருட்களும் அநாதி நித்தியமாக உண்டு என்னும் சைவ சித்தாந்தக் கொள்கை பற்றி அறிஞர்கள் எழுப்பும் சில நுணுக்கமான தடை களுக்கு ஈண்டு விடைகள் கூறுகின்றோம்:—

தடை (1) இறைவனைப் போலவே ஆன்மாக்களும் பாசங்களும் அநாதி நித்தியமாக உண்டு எனக் கொள்வது, இறைவனின் தனித் தன்மைக்கு இழுக்காகாதா?

விடை :—ஆன்மாக்களும் பாசங்களும் அநாதி நித்திய மாக இருப்பினும் அவை இறைவனுக்கு மேலாகவோ எதி ராகவோ, ஒப்பாகவோ இருந்தால் அவனின் தனித் தன் மைக்கு இழுக்குநேரும் எனக் கூறலாம். இறைவனுடைய பூரண வியாபகத்தில் ஆன்மாக்கள் வியாப்பியமாயும், பாசங்கள் வியாத்தியாயும் அடங்கி நிற்றலால் அவை அவ னுக்கு மேற்பட்டவை அல்ல; அவற்றின் அநாதி இருப் பால் இறைவனுக்கே உரிய தனித்தன்மை இலக்கணங்க ளாகிய பூரண வியாபக முடைமை, முற்றறிவுடைமை, எல்லையில் கருணையுடைமை, வரம்பிலா ஆற்றலுடைமை,

தன்வயமுடைமை, வரம்பி லின்பமுடைமை முதலியவை ஒரு சிறிதும் பாதிக்கப்படவில்லை. எனவே அவை அவ னுக்கு எதிரானவையும் அல்ல; இருப்பைத் தவிர இறை வனுக்குரிய சிறப்புத் தகுதிகளில் வேறென்றும் அவை களுக்கு இல்லாமையால் அவை அவனுக்கு ஒப்பானவை யும் அல்ல. ஆகவே அவை அநாதியே இருப்பதால் இறை வனின் தனித்தன்மைக்கு எவ்வித இழுக்குமில்லை என்க.

உயிர்களும் பாசங்களும் அநாதியே உள்ளனவாயி னும், அவை இருத்தற்கும் இயங்குதற்கும் இறைவனையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. பரம கருணாநிதியாகிய இறைவனின் அருள்வெளிப் பரப்பினுள் நல்ல பொருள், கெட்டபொருள், அறிவுடைப்பொருள், அறிவற்றபொருள் என்னும் பேதங்களின்றி எல்லாப் பொருட்கும் இருப்பும் இயக்கமும் உண்டெனக்கொள்வது அவனின் தனித்தன் மையை இன்னும் சிறப்புற எடுத்துக்காட்டுமே அன்றி ஒரு சிறிதும் குறைத்துக் காட்டாது.

இப்பொருட்கள் அநாதி நித்தியமாக உண்டெனக் கொள்ளாமல், இறைவனைத் தவிர வேறு பொருட்களே இல்லை என்றோ, அல்லது இறைவனே லீலை காரணமாக இப் பொருட்களாகத் தோன்றுகிறான் என்றோ, அல்லது இறைவனே இவற்றை உண்டாக்கினான் என்றோ கொள் வது இறைவனின் தனித்தன்மையைப் பாதிப்பதாகும் என் பதையும் நாம் உணரவேண்டும். இறைவனைத் தவிர வேறு பொருட்களே இல்லை என்றால், உயிர்களும், உலகமும் காணப்படுதற்கு ஒரு காரணம்வேண்டும். இவை "பொய்த் தோற்றம்" என்றோ, "கற்பிதம்" என்றோ சொன்னால் இந்தப் "பொய்த்தோற்றமும்" "கற்பிதமும்" வேறு பொருட்களில்லாமையால் இறைவனுக்கே ஏற்படுவதாகக் கூறியாக வேண்டும். இதனால் இறைவன் அறியாமை உடையவன் என்றாகி, அவனின் தனித்தன்மை இலக்கண மாகிய, "முற்றறிவுடைமை"க்குக் கேடு நேரும். இறை வனே லீலை காரணமாக இங்ஙனம் தோன்றுகிறான் என் றால் அவனுக்கு இயல்பிலே உள்ள தனித்தன்மை இலக் கணமாகிய, "வரம்பிலா இன்பமுடைமை" பாதிக்கப்படும். இனி இறைவனே இவற்றை உண்டாக்கினான் என்றால் ஒரு தேவையும் அற்றவனாகிய அவன் ஏன் இவற்றை உண்

டாக்கவேண்டும்? என்னும் கேள்வி எழுவதோடு, ஆன்மாக்கள் படும் துன்பங்களுக்கெல்லாம் அவனே காரணன் என்றாகி, அவனுக்கு மிகச் சிறப்பாக எடுத்துக் கூறப்படும் தனித்தன்மை இலக்கணமாகிய, "எல்லையில் கருணையுடைமை"க்கு இழுக்குநேரும். எனவே ஆன்மாக்களும் பாசங்களும் யாராலும் உண்டாக்கப்படாமல் அநாதி நித்தியமாகவே இருக்கின்ற பொருட்கள் எனக் கொள்வதே இறைவனின் தனித்தன்மையை நன்கு நிலைநாட்டுவதாகும்.

தடை (2) இறைவன் இயற்றும் ஐந்தொழில்களும் ஆதியா? அநாதியா? அநாதிகேவலத்தில் ஆன்மாக்களுக்கு எவ்விதமான தனு, கரண, புவன போகங்களும் இல்லையாதலால் ஐந்தொழிற்கும் துவக்கம் உண்டு என்பது பெறப்படுகிறது. அங்ஙனமானல் துவக்கம் உள்ளவை அழியும் என்னும் நியதிப்படி இறைவனின் ஐந்தொழில்களும் என்றாவது ஒருநாள் முடிவுக்கு வந்துவிடும் என்று தானே கொள்ளவேண்டும்?

விடை:—ஐந்தொழில்களும் அநாதி என்றே சைவ சித்தாந்தம் கொள்கிறது. அநாதிகேவலத்தில் காலதத்துவம் இல்லை. எனவே ஆண்டு நிகழ்ந்த உற்பவம் காலாதீதமானது. காலாதீதத்தைத்தான் அநாதி என்று கூறுகிறோம். காலாதீதமான ஒன்றிற்கு முடிவில்லை. இனி இதனை வேறொரு வகையாலும் விளக்கலாம்.

துவக்கம் உள்ளவை அழியும் என்னும் நியதி யாண்டும் மாறாது. அதனாலேயே "ஒவ்வொரு சிருட்டிக்கும் அழிவுண்டு" எனக் கொண்டு, அவ்வழிவுக் காலத்தை, "மகா சங்கார காலம்" என நூல்கள் குறிப்பிடுகின்றன. அநாதிகேவலத்தில் கிடந்த ஆன்மாக்களுக்கு முதன் முதல் தனு, கரண, புவன, போகங்களைப் படைத்தளித்தமையைப் "பிரதம மகாசிருட்டி" அஃதாவது "முதலுற்பவம்" எனச் சாத்திரங்கள் பெயரிட்டழைக்கக் காண்கின்றோம். இம் முதலுற்பவத்தின் பின் மகா சங்காரம் ஏற்பட்டு அப்புறம் எத்தனையோ புனருற்பவங்களும் சங்காரங்களும் நிகழ்ந்துவிட்டன. அநாதி நித்தியனாகிய இறைவன் மீண்டும் மீண்டும் ஐந்தொழில் ஆற்ற முடியுமாதலால், சிருட்டி, திதி, சங்காரங்களும் முடிவின்றி என்றும் நிகழ்ந்து கொண்டே இருக்கும். உற்பவம் என ஒன்றிருந்தால்

அழிவு என ஒன்றிருக்கவேண்டியதே நியதி. அன்றி முதற் உற்பவம் என ஒன்றிருந்தால் இறுதி உற்பவம் என ஒன்றிருக்கவேண்டியது அவசியமன்று. ஏனெனில் முதன் முதல் குடத்தை உற்பத்திசெய்கின்ற குயவன், குடத்தை உபயோகப்படுத்துகிற மக்களும், குடம் செய்வதற்குரிய மண் முதலிய பொருட்களும் இருந்தால் மீண்டும் மீண்டும் எத்தனைதரம் வேண்டுமானாலும் அவனுக்கு ஆற்றலும் ஆயுளும் இருக்கும்வரை குடத்தை உற்பத்தி செய்து கொண்டே இருக்கலாம் அன்றோ? ஐந்தொழில் ஆற்றுபவனாகிய இறைவனே என்றும் உள்ளவன்; அவனுடைய ஆற்றலும் என்றும் குறைவுபடுவதில்லை; ஆன்மாக்களுக்குத் துணைசெய்யவேண்டும் என்னும் கருணையும் அவனுக்கு என்றும் உண்டு; ஐந்தொழிலால் பயன்வேண்டி நிற்கும் ஆன்மாக்களும் என்றும் உண்டு; பிரபஞ்ச சிருட்டிக்கு மூலப்பொருளாக இருக்கும் மாயையும் அநாதி நித்தியமாக உண்டு. ஆகவே இறைவன் என்றும் ஐந்தொழில் ஆற்றுவான் என்றும் அத்தொழில்களுக்கு ஒரு முடிவில்லை என்றும் கொள்வது தவறாகாது. செய்பவன் அநாதி நித்தியனாதலால் செய்தொழிலும் அநாதி நித்தியம் என்பதே சைவ சித்தாந்தக் கொள்கையாகும்.

தடை (3) ஐந்தொழிலாற் பயன்வேண்டி நிற்கும் ஆன்மாக்கள் என்றும் உண்டு என்பது எங்ஙனம் பொருந்தும்? எல்லா ஆன்மாக்களும் முத்தியடைந்த பின்னர், உலகினைப் படைக்கவேண்டிய அவசியமில்லையாதலால் அப்பொழுது இறைவன் ஐந்தொழில் ஆற்றுவதை நிறுத்தத் தானே வேண்டியது வரும்?

விடை :—ஆன்மாக்கள் எண்ணில என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். கணித சாஸ்திரத்தில் ஒரு விதி உண்டு. எண்ணிலி (Infinity)யிலிருந்து எத்தனைத் தொகையைக் கழித்தாலும் மீதம் எண்ணிலி(Infinity)யாகவே இருக்கும் என்பதே அவ்விதியாகும். கணித சாஸ்திர விதி குருட்டு நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கும் என யாரும் கூறத்துணியார். எனவே அவ்விதியின்படி எத்தனை ஆன்மாக்கள் முத்தியினை அடைந்தாலும் முத்தி அடையவேண்டிய ஆன்மாக்களின் தொகை எண்ணில(Infinity)யாகவே இருக்கும் என்பது பெறப்படும்.

இதனால் இறைவனின் ஐந்தொழில்களும் என்றும் நடை பெற்றுக்கொண்டே இருக்கும் என்பது தெளிவாகும்.

தடை (4) எல்லா ஆன்மாக்களும் முத்தி அடைய வேண்டுமென்பது தானே இறைவன் ஐந்தொழில் ஆற்று வதின் இலட்சியமாக இருக்கவேண்டும்? முத்தியடைய வேண்டிய ஆன்மாக்களின் தொகை என்றும் எண்ணில வாகவே இருக்கும் என்றால், இறைவனுடைய இலட்சியம் ஒருபோதும் நிறைவேற முடியாதென்றாகிறது; இஃது இறைவனுக்கு இழுக்காகாதா?

விடை :—ஒவ்வோர் ஆன்மாவும் முத்தி அடையும் வாய்ப்பினைப் பெறவேண்டும் என்பதனால்தான் இறைவ னின் ஐந்தொழில்களும் என்றும் நடைபெற்றுக் கொண்டே இருக்கும் எனக் கூறுகிறோம். ஆனால் ஆன் மாக்கள் அனைத்திற்கும் ஒருங்கேயோ, அல்லது ஒரு குறிப் பிட்ட காலத்திற்குள்ளோ முத்தி அளிக்கவேண்டும் என் பது இறைவனின் இலட்சியமாக இருக்க முடியாது. ஏனெனில் இறைவனைப் பொறுத்தவரையில் அவன் காலம் நோக்கி நிற்க வேண்டியவனல்லன். உடனேயே எல்லா ஆன்மாக்களுக்கும் முத்தியை அளித்துவிடலாம். அங்ஙனம் அவன் செய்யவில்லை. காரணம் என்ன? உயிர்கள் ஆணவ மலப் பற்றை விடுத்து இறைவனைப்பற்றி நிற்கும் நிலையே முத்தி எனப்படும். அநாதியே தம் எளிய இயல்பால் ஆணவமல மறைப்புக்குள்ளான உயிர்கள் மலத்தின்மீ துள்ள பற்றை விடவேண்டுமானால் அநுபவ உணர்வு பெற வேண்டும். அநாதியே அறிவு, இச்சை, செயல்களை உடை யவையான ஆன்மாக்கள் ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு வகையான விருப்பு, வெறுப்புக்கள் உண்டு. அவ்விருப்பு வெறுப்பினுக்கேற்ப நல்வினை, தீவினைகளைப் புரிந்து, அவ் வினைகளின் பயனாகவரும் இன்ப, துன்ப அநுபவங்களை நுகர்வதின்மூலமே அவை அநுபவ உணர்வு பெறமுடியும். இறைவன் உடனேயோ, ஒருங்கேயோ, அல்லது குறிப் பிட்ட காலத்திற்குள்ளோ ஆன்மாக்கள் அனைத்திற்கும் முத்தி அளிக்க வேண்டுமென்றால், வெவ்வேறு வகையான அநுபவங்களின்மூலம் உணர்வு பெறுவதையே இயல்பா கக் கொண்ட அவற்றின் அறிவு, இச்சை, செயல்களை ஒழித்துவிட்டு ஒருங்கேயோ, உடனேயோ, அல்லது ஒரு

குறிப்பிட்ட காலத்திற்குள்ளோ உணர்வு பெறக்கூடிய புதிய அறிவு, இச்சை, செயல்களை உண்டாக்கவேண்டும். அங்ஙனம் செய்வதென்பது இருக்கிற ஆன்மாக்களை அழித்துவிட்டுப் புதிய ஆன்மாக்களைச் சிருட்டிப்பது போலாகுமாதலால் அஃது இறைவன் கருணைக்கும் அறிவுடைமைக்கும் ஏற்றதாகாது. ஆன்மாக்களின் அறிவு, இச்சை, செயல்களை இயங்கவொட்டாமல் தடுத்துவிட்டு முத்தியை அளித்தாலோ, அது கல்லுக்கும் மண்ணுக்கும் முத்தி அளித்ததுபோலப் பயனற்ற செயலாக முடியும். எனவே ஆன்மாக்களிடத்துப் பெருங்கருணைகொண்ட இறைவன் அவை ஒவ்வொன்றும் அதனதன் இயல்புப்படி அநுபவ உணர்வு பெறுவதற்குத் துணை நின்று, அவ்வுணர்வின் முதிர்ச்சியால் அவை தன்னைப் பற்றும்பொழுது முத்திப் பேற்றை வழங்குகிறான் என்பதை நாம் உணர்தல் வேண்டும். இதனாலேயே இறைவன் செயலுக்கு எந்தக் காலவரையறையும் இருக்க முடியாதெனக் கூறுகிறோம். தன்னைச் சார்ந்தார்க்கே அவன் முத்திப்பேற்றை வழங்குவான் என்றும், அல்லாதார்க்கு அவரவர் இயல்புப்படி நல்வினை தீவினைகளைப் புரியவும் அவற்றின் பயனாகவரும் இன்ப துன்ப அநுபவங்களைப் பெறவுமே துணை நிற்பான் என்றும், நாம் கூறுவதைப் பின்வரும் அப்பரடிகள் திருவாக்கும் நன்கு புலப்படுத்தும் :—

" சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கலால்
நலமிலன் நாடொறும் நல்குவா னலன்
குலமில ராகிலும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச் சிவாயவே "

இதனையே உமாபதி சிவமும்,

" நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர் சங்கரன் " —திருவருட்பயன் 9

என அருளிச் செய்துள்ளார்.

ஆன்மாக்கள் தொகையால் மட்டும் எண்ணில அல்ல ; அவை ஒவ்வொன்றுக்கும் உள்ள தனி இயல்பு வேறுபாடுகளும் அனந்தமாகும். இவ் வேறுபாட்டால் ஏற்பட்ட மலமறைப்பு வேறுபாடும் எண்ணற்றவையாகும். எனவே ஆன்மாக்கள் கொள்ளும் விருப்பு, வெறுப்புக்களும் கணக்

கற்றவையாகும். இதனுல் அவை அநுபவ உணர்வுபெறும் காலத்திற்கும் எண்ணில்லை என்பது தெளிவாகும். எண்ணிலவாகிய ஆன்மாக்கள் முத்தியடையும் காலமும் "எண்ணிலி" (Infinity)யாகவே இருக்குமாதலால்தான் எத்தனை ஆன்மாக்கள் முத்தியை அடைந்தாலும் முத்தியடைய வேண்டிய ஆன்மாக்களும் "எண்ணிலி"யாகவே இருக்கும் என்கிறேம். ஆனல் இறைவன் என்றும் ஐந்தொழில் ஆற்றிக்கொண்டே இருப்பானுதலால் தனிப்பட்ட முறையில் நோக்கும்பொழுது, ஒவ்வோர் ஆன்மாவும் அதனதன் இயல்புப்படி அநுபவ உணர்வுபெற்று முத்தியினை அடையும் என்பதும் இனிது விளங்கும்.

ஆன்மாக்களின் இயல்பு வேறுபாடுகளை நன்கறிந்த இறைவன் அவைகளுக்கு ஒருங்கேயோ அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள்ளோ முத்தி வழங்குவதைத் தன் இலட்சியமாகக் கொள்ளாமல் ஒவ்வோர் ஆன்மாவும் அதனதன் இயல்புப்படி முத்தியினை அடையும்பொருட்டு என்றும் ஐந்தொழில் ஆற்றுவதையே கருணை காரணமாகத் தன் இலட்சியமாகக் கொண்டுள்ளானுதலால், அவன் தன் இலட்சியத்தை ஒருபோதும் நிறைவேற்ற முடியாதவனுகிருன் என்னும் இழுக்கிற்குள்ளாக வில்லை என்பது தானே போதரும்.

தடை (5) ஆன்மாக்கள் எண்ணிலவாதலால் இறைவன் எத்தனை ஆன்மாக்களுக்கு உடல்களைப் படைத்தளித்தாலும் உடல் பெருமல் கேவல இருளிலேயே மூழ்கிக் கிடக்கும் ஆன்மாக்களும் எண்ணிலவாகவே இருக்கவேண்டுமன்றே? அங்ஙனமானுல் அவற்றிற்கு இறைவனுல் ஏதும் பயனில்லை என்ருகிறது. இனிப் பயன்பெறும் என்ருல் இதுகாறும் பயன் பெருமைக்கு என்ன காரணம்? ஒரு முறை இறைவனுல் எவ்விதப் பயனும்பெறத் தகுதியில்லாமற் போன ஆன்மாக்களுக்குப் பின்னர் அப்பயனைப் பெறுவதற்கு என்ன புதிய தகுதி உண்டாக முடியும்?

விடை :— ஆன்மாக்கள் எப்படி எண்ணற்றனவாக இருக்கின்றனவோ, அதுபோலவே இறைவனும் வரம்பிலா ஆற்றலுடையவன் என்பதை நாம் உணரவேண்டும். எல்லையில் வியாபகமுடைய அவன் ஒவ்வோர் ஆன்மாவுள்ளும் நிறைந்திருப்பவனுதலால் அந்த, அந்த ஆன்மாவிற்கு வேண்

டிய தனு கரணங்களைத் தன் வரம்பிலா ஆற்றலால் படைத் தளிக்க முடியும். எனவே அவனால் பயன்பெற முடியாமல் போகும். ஆன்மாக்களும் இருக்குமோ என ஐயுற வேண்டியதில்லை. முத்தி என்பது ஒவ்வோர் ஆன்மாவும் அதனதன் இயல்புப்படி தனித்தனியே முன்னேறிப் பெறுகின்ற ஒரு நிலையாகும். எண்ணற்ற பேதங்களை உடைய ஆன்மாக்கள் அம் முத்தியினைப் பெறுதற்குரிய காலமும் எண்ணிலியாகவே இருக்கவேண்டு மாதலால் எத்தனை ஆன்மாக்கள் முத்தி அடைந்தாலும் முத்தி அடையவேண்டிய ஆன்மாக்களும் எண்ணிலியாகவே இருக்கும் எனக் கூறுகிறோம். சிருட்டி என்பதோ இறைவன்தன் ஆற்றலைக் கொண்டு செய்கின்ற ஒரு காரியமாதலால் அவன் எண்ணிலா ஆன்மாக்களுக்கும் எண்ணிலா உடம்புகளைத் தன் வரம்பிலா வல்லமையால் படைத்தளிக்க முடியும் என்க. ஆகவே ஒன்றுக்கொன்று முரணாமை அறிக.

தடை (6) " அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய்..." எனச் சிவஞானபோதம் நான்காம் சூத்திரம் இரண்டாம் அதிகரண உரையில் சிவஞான முனிவர் கூறுவதிலிருந்து உயிர்கள் அநாதியே மலத்தைப்பற்றின என்பது தெளிவாகிறது. ஆனால், "பற்றுதல்" என்பது ஒரு தொழிலாதலால் அத்தொழிலைச் செய்யும் முன்னர் ஆன்மாக்கள் சுத்தமாகத் தானே இருந்திருக்கவேண்டும் ? இங்ஙனம் ஓர் இடர்ப்பாடுவரும் என்பதாலேயே அதினின்றும் தப்பித்துக் கொள்வதற்காக, " அநாதி " என்னும் சொல்லைப் பெய்திருப்பதுபோல் தோன்றவில்லையா ?

விடை :—சுடுதல் என்பது ஒரு தொழில். ஆகவே அத்தொழிலைச் செய்வதற்கு முன்னர் அக்கினி குளிர்ச்சியாய் இருந்திருக்கும் எனக் கொள்ளமுடியுமா ? அக்கினி உள்ளபொழுதே சுடுதலாகிய தொழிலும் உடனுண்டு ; அதுபோலவே அறிவு, இச்சை, செயல்களை உடைய ஆன்மாக்கள் உள்ளபொழுதே பற்றுதலாகிய தொழிலும் உடனுண்டு; அவைபற்றிய பொருளாகிய ஆணவமலமும் அப்பொழுதே உடனுண்டு. அநாதியாய் உள்ள ஆன்மாக்கள் அநாதியே உள்ள ஆணவமலத்தைப் பற்றியது உடனிகழ்ச்சியாதலால் அதற்கு முன், பின் என்னும் கால இடையீடு இல்லை. இதனால் ஆணவமலத்தைப் பற்றுமுன்

னர் ஆன்மாக்கள் சுத்தமாக இருந்திருக்கவேண்டும் எனக் கொள்ளுதற்கு இடனில்லை என்க.

தடை (7) இறைவன், ஆணவமலம், மாயாமலம் ஆகிய மூன்றும் அநாதியே உள்ள பொருட்களே ஆகும். எளிய அறிவு, இச்சை, செயல்களை உடைய ஆன்மாக்களுக்கு அநாதியே இறைவனைப் பற்றுதல் அருமையாய் இருந்திருக்கக்கூடும். ஆனல் ஆணவமலத்தைப் பற்ருமல் மாயா மலத்தைப் பற்றி யிருக்கலா மல்லவா ?

விடை :—மாயா மலத்திற்குத் தன்னளவில் ஆன்மாக்களை மயக்குந்தன்மை இல்லை. ஆணவமலத்திற்கு மயக்கும் தன்மைஇயல்பாதலால்,எளியஇயல்பு வாய்ந்தஆன்மாக்கள் அதன் வயப்பட்டமையில் வியப்பொன்றும் இல்லை என்க.

மாயையும் மயக்கம் செய்கிறதே எனக் கேட்கலாம். அஃது ஆணவமலத்தானய செயற்கையால் ஏற்பட்டதாகும். இதனைச் சிவஞான சித்தியார் சுபக்கம் பிரமாணவியல் 2-ம் சூத்திரம் 3-ம் அதிகரணம் செய்யுள் 53-ல், "வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே," எனக் கூறியிருப்பதற்குச் சிவஞானமுனிவர், "இத்தன்மையாகிய மாயை ஆணவமலம்போல மயக்கமே செய்யும் என்பர் சைவருளொருசாரார்; அதனை மறுத்தற்கு மயக்கமும் செய்யும்" என்ருர் என, "உம்மை"க்கு ஒரு விளக்கம்கொடுத்து உரை கூறியிருப்பதிலிருந்து நன்கு உணரலாம். எனவே மாயா மலத்திற்குத் தன்னளவில் மயக்கும் தன்மை இல்லாமையால் ஆன்மாக்கள் அதன் வயப்படாமல் ஆணவமல வயப்பட்டன என அறிக.

இதுகாறும் சில தடைகளுக்கு விடைகள் கூறினேம். நாம் எழுதிய, "கடவுளால் முடியாத காரியங்கள்" என்னும் கட்டுரை, "சித்தாந்தம்" சார்வரி சித்திரை இதழிலிருந்து சில மாதங்கள் தொடர்ச்சியாக வெளிவந்துள்ளது. அதன்கண் இன்னும் சில தடைகளுக்கு விடைகள் கூறியுள்ளோம். "மரம் முந்தியா ? வித்து முந்தியா ?" என்னும் கட்டுரையில்('சித்தாந்தம்' விகாரி மார்கழி இதழ்) முதலுற்பவம்பற்றி விளக்கி யிருக்கிருேம். எனவே இம்மூன்று கட்டுரைகளையும் ஒருங்கே வாசித்தால் சைவ சித்தாந்தக் கொள்கைகள் பற்றிய ஐயப்பாடுகள் பெரிதும் தீரக்கூடும் எனத் தெரிவித்துக்கொண்டு இதனை முடிக்கின்ருேம்.

---

# கொடிக்கவி

(திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்.)

தன்னேரில்லாத் தனிப்பெருஞ் சமயமாகிய நம் சைவ சமயத்தில் பல்வேறு நூல்கள் பல்கி இருப்பினும் அவற்றுள் இரண்டு வகை நூல்களே ஈடும் எடுப்பும் அற்றவை. அவை தோத்திர நூல்கள், சாத்திர நூல்கள் என்பன. தோத்திர நூல்களுள் தலைசிறந்தனவாகக் கூறப்படுவன திருமுறைகளும், சாத்திர நூல்களுள் மாண்பு மிக்கனவாக உள்ளவை மெய்கண்ட நூல்களும் ஆகும். பெரிய புராணம் இவ் விருவகை நூல்களின் கருத்துப்படி ஒழுகிய செயற்கரும் செயல்களைப் புரிந்த திருத்தொண்டர்களின் வரலாற்றைக் கூறும் வரலாற்று நூல் என்பதை ஈண்டு நினைவுகொள்வது நேர்.

சாத்திர நூல்களாகிய பதினான்கனுள் ஒன்று கொடிக்கவி என்பது. இந்நூலை இயற்றிய ஆசிரியப் பெருந்தகையார் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் ஆவார். இவர் திருக்கயிலாய பரம்பரையைச் சார்ந்த புறச் சந்தான குரவர்கள் நால்வருள் ஒருவர். இவரது ஆசிரியர் கடந்தை ஸ்ரீ மறைஞான சம்பந்தர் ஆவார். கவுட நாட்டு மன்னன் மகனாகிய சுவேதவர்மன் என்பவன் தனது வெண்குட்டம் நீங்கச் சிதம்பரத்தில் சிவகங்கையில் நீராடி அந்நோய் நீங்கப்பெற்று இரண்யவர்மன் ஆயினன். அவன் தான் தங்கியிருக்கத் தில்லையின் கீழ்ப்புறம் ஒரு நகரினை உண்டுபண்ணினன். அதுவே கொற்றவன் குடி என்பது. அங்கு நம் உமாபதி சிவாசாரியார் ஒரு திருமடத்தில் தங்கியிருந்தமையின் இவர் கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியார் எனப்பட்டனர். இவர் உமாபதி தேவ நாயனர் என்றும் கூறப்பெறுவர்.

பெயர்க் காரணம்

உமாபதி சிவாசாரியார் தில்லைவாழ் அந்தண மரபினர். தென்மொழி வடமொழிகளை நன்கு உணர்ந்தவர். சைவ சமய தோத்திர சாத்திர நூல்களை நன்கு பயின்றவர். இவர் தமிழில் சாத்திர நூல்களையும், புராண நூல்களையும் பாடி இருப்பதாலும், பௌட்கராகமத்துக்கு வியாக்கியானமும் எழுதி யிருப்பதாலும் இவர்க்குள்ள தமிழ்ப் புலமை, வடமொழிப் புலமை ஆகிய இவற்றை நன்கு உணரலாம்.

உமாபதி சிவாசாரியரின் பெருமை மிகச் சிறந்தது. இவரிடத்தில் தாயுமானர் அன்புகாட்டி அருள்பெறும் நாள் எந்நாளோ என்று ஏங்கிக் கேட்டுள்ளார். இதனை,

பெருமை

"சிற்றம் பலமென்னும் சின்மயராம் தில்லை நகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறும்நாள் எந்நாளோ" என்றும்,

"குறைவிலருள் ஞானமுதல் கொற்றங் குடிஅடிகள்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாம்இருப்பது எந்நாளோ"

என்றும் தாயுமானர் வினவுதல்மூலம் விளங்கிக்கொள்ளலாம். இவர்பால் தில்லைக் கூத்தப் பெருமானர் கொண்டிருந்த அன்பை இவர்க்கு எழுதிய திருமுகத்தின் வாயிலாக உணரலாம். அத்திருமுகத்தில் இறைவன் தன்னை ஒருமையில் "அடியார்க்கு எளியன்" என்று குறித்துக் கொண்டு, இவரை மரியாதைப் பன்மையில் "கொற்றங் குடியார்க்கு" என்று எழுதி இருப்பதுகொண்டு காணவும். இவரைக் கொற்றங் குடியார், உமாபதிதேசிகர், கொற்றங் குடி முதல், கொற்றங்குடி அடிகள் என்றும் கூறுவர்.

இவர் நடராசப் பெருமானது கட்டளைப்படிபெத்தான் சாம்பானுக்குத் தீட்சை புரிந்து முத்திக்கு வழி வகுத்துக் கொடுத்தவர். இவனுக்கே அன்றிச் சாபத்தால் முள்ளிச் செடியாக இருந்த முனிவருக்கும் முத்தி கொடுத்தவர்.

காலம்

உமாபதிசிவனர் காலம் கி. பி. 13-ஆம் நூற்றாண்டாகும். இவர் கூத்தப்பெருமானின் குஞ்சித சேவடியில் கும்பிட்டிருக்கும் நிலையைப் பெற்றநாள் சித்திரை மாதம் அத்த நட்சத்திரமாகும்.

பாடக் காரணம்

இனிக் கொடிக் கவியைப்பற்றிச் சிறிது கூறுவோமாக. கொடிக்கவி பாடப்பட்டதற்குக் காரணம் உண்டு. உமாபதியார் கொற்றவன் குடியில் எழுந்தருளி இருந்தபோது, தில்லைக் கூத்தப் பெருமானர் பெருவிழாவின் தொடக்கத்தில் கொடி ஏற்றச் செயல் நடத்தவேண்டிய முறையும், பொறுப்பும் இவருக்கு இருந்தன. ஆனல் தில்லைவாழந்தணர்கள் வேறு ஒருவரை ஏற்பாடுசெய்து அந்நிகழ்வு நடத்த முற்பட்டபோது கொடிச்சீலை ஏறாமல் கீழே விழுந்தது. மறை முறைப்படி பன்முறை முயன்றும் பயனின்றிப்

போயது. இது கண்டு எவரும் வருந்தினர். இங்ஙிலையில் கூத்தப் பெருமானர் வான்வழி "கொற்றங்குடி சிவாசாரியரைக் கொண்டு கொடி ஏற்றச் செய்க" எனப் பணித்தனர். இக் கட்டளையை உமாபதியாரிடம் உரைக்க அவர் அவ்வாணையைத் தலைமேல் கொண்டு, கொடிமரத்தருகு சென்று, ஆகமவிதிப்படி ஆவனசெய்து கொடிக்கவி பாடினர். கொடியும் நல்லமுறையில் ஏறியது. யாவரும் மகிழ்ந்தனர். இதுவே கொடிக்கவி நூல் வெளிவரக் காரணம்.

பாடல் அமைப்பு

கொடிக்கவி நூலில் நான்கு பாக்களே உள்ளன. அவற்றுள் ஒன்று கட்டளைக் கலித்துறை, ஏனைய மூன்றும் நேரிசை வெண்பாக்கள். இக் கொடிக்கவி நூல், "பஞ்சாக்கரப் பாசுரம் உரைக்கும் நூல்" என்றும் கூறப்பெறும். கொடிக்கவி என்ற பெயர்க்குக் காரணம், கொடி ஏறுதற்காகப் பாடப்பட்ட பாடல்கள் என்பதாகும். இக் கொடிக்கவி நூலின் இரண்டாவது பாடல் சூக்கும பஞ்சாட்சரப் பொருளையும், நான்காவது கவி தூல பஞ்சாட்சரம், சூக்கும பஞ்சாட்சரம், அதிசூக்கும பஞ்சாட்ரம் என்பவற்றின் பொருளையும் உணர்த்தி நிற்றலின் இந்நூல் பஞ்சாட்சரப் பாசுர நூல் எனப்பட்டது. நான்கு பாடல்களில் இரண்டு பாடல்கள் ஐந்தெழுத்தின் அருமை பெருமைகளை உணர்த்தலின் "கமுகந் தோட்டம்" என்றாற்போல மிகுதிபற்றிப் பஞ்சாட்சர நூல் என்று கூறிவருவது சாலப் பொருத்தமே ஆகும். மாயாதீதன் என்பதை உணர்த்தும் முதல் பாடலில் முப்பொருள் நிச்சயமும் இயல்பும் கூறப்படும். மூன்றும் பாடல் இறைவன் மாயாதீதன் என்பதையுணர்த்தும். முழுமுதற் பரம்பொருளாம் முக்கண் மூர்த்திக்குரிய தசாங்கங்களுள் கொடியும் ஒன்று. இதனை மணிமொழியார்,

இறைவன் கொடியின் மாண்பு

சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலப் பொலியும் கொடிகூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டும்
கோதிலா ஏறாம் கொடி.

என்று குறிப்பிட்டுள்ளனர். இங்ஙனம் தசாங்கம் எவர்க்

கும் குறிப்பிடப்படும். தேவர்கட்கும் கூறப்பெறும். மக்கள் தலைவனுன மன்னனுக்கும் கூறப்பெறும். அவைகள் கொடி என்னும் ஓர் உறுப்பைக் கூறவேண்டும் என்பதற்காகக் கூறப்படும் முறையில் அமைந்தனவே அன்றி இறைவனது கொடிபோல ஓர் உயர்ந்த குறிக்கோளைக் குறிக்கொண்டு அமைந்தவை அல்ல என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம். இஃது உண்மை. வெறும் புகழ்ச்சி அன்று. தெய்வங்கட்கும் மன்னர்கட்கும் அமைந்த கொடிகள் அவரவர்கள் அடையாளமாகக் கொண்ட பொருள்களின் பெயருடன் சார்த்திக் கூறப்பெறும். கருடக் கொடி, மீனக் கொடி என்பன போன்றவை இதற்கு எடுத்துக் காட்டாகும். இதுபோலவே தான் இறைவன் கொடியும் "ஏற்றுக்கொடி" எனப்படும். என்ருலும் ஏற்றுக் கொடி என்னும் தொடரில் உள்ள உண்மைப்பொருள் ஏனைய கொடித் தொடர்களில் அமைந்திலது. உயிர்களை உயர்நிலைக்கு ஏற்றும் கோடி என்றபொருள் ஏனைய கொடிகட்கு உரிய தொடர்களில் இருக்கின்றதா என்பதை ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். ஆகவே இறைவன் கொடியே ஏற்றுக்கொடி - ஏற்றமார் கொடி என்பதில் ஐயம் எழ இடனுண்டா? இது குறித்தே வாதவூரர் 'மேல் விளங்கி ஏர் காட்டும் கோதிலா ஏரும் கொடி' என்றனர்.

**கொடியேற்றக் குறிக்கோள்**

இறைவன் திருக்கோயிலின் கொடி ஏற்ற விழாவின் கருத்து உயிர் பாசப் பற்றினை இறக்கி அருள் வழிப்பட்டு இறைவன் திருவடிகளை அடைய உயர்வதைக் குறிப்பதாகும். இதனுல்தான் கொடி ஏற்றம், ஏற்றுக்கொடி என்றே கூறப்படுகிறது. பருஉடல் நீக்கப் பயனை விளக்கும் குறிப்புடையதே கொடி ஏற்றமாகும்.

கொடி, கொடிமரத்தை விடாதுபற்றி ஏறி இருப்பதைக் காண்கின்ருேம். அதுபோல, உயர் குருவின் திருவருளாம் சிவஞானத்தைப்பற்றிச் சிவானந்தத்தில் இன்புற்று இருத்தலே வழி என்பதே கொடி ஏற்றத்தின் குறிக்கோள்.

உயிரை ஓங்கச்செய்வது ஓங்காரம். அதுபோலவே உயிரை உயரச்செய்யும் குறிப்பைக் காட்டுவதே உயரக் கொடி கட்டுதலாகும்.

பீடத்தின் இடமாக நின்று எழுந்து விளங்குவது கொடிமரம். அக்கொடிமரத்தின்மீதே விளங்கித் தோன்று வது கொடி. இக்குறிப்பு உந்தியினின்று எழும்பி இத யத்தே சிவக்காட்சி விளங்கப்பெறுதலைக் குறிப்பதாகும்.

"பதி பசு பாசம் எனப் பகர் மூன்று", "நாடும் பதி யுடன் நற்பசு பாசமும்", "பதியும் பசுவொடு பாசமும்" "கிடக்கின்றவாறே கிளர்பயன் மூன்று" "அறிந்தனு மூன்றுமே யாங்கணும் ஆகும்" என்ற திருமூலர் வாக்கியங்களை நோக்கும் போது இம்மூன்றைத் தவிர வேறு இல்லை என்பது புலனு கின்றது. என் ஆலயத்தின் அமைப்பும் இதைத்தானே எடுத் துக் காட்டுகின்றது. இதனையும் திருமூலர்,

எங்கும் முப்பொருள்

கோயில் முப்பொருள்

ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகும்நல் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்தகொள் வார்கட்கே

என்று உணர்த்தியும் உள்ளனர் அல்லரோ? இம் முப் பொருளைப் பற்றி உணர்வதே கல்விப் பயனாகும். இந்த உண்மைப் பொருளை உள்ளத்தில் கொண்டேதான் ஒல்காப் பெருமைத் தோல்காப்பியனாரும் "வேண்டிய கல்வி யாண்டும் மூன்று இறவாது" என்றருளினர். யாண்டும் என்ற இடத்து முற்றும்மை கொடுத்துக் குறிப்பிட்டிருப்பது, இஃது எவர்க்கும் ஒப்பமுடிந்த முடிபாகும் என்பதன் பொருட்டா கும். அதாவது சித்தாந்தம் செய்ததாகும். திருவள்ளுவ ரும் முப்பொருள் உண்மையினை உணர்த்தும் முறையிலேயே தமது பாயிரத்தையும் அமைத்துள்ளனர். கடவுள் வாழ்த்துப் பதியினையும், நீத்தார் பெருமை பசுவையும், வான் சிறப்பு அறன் வலியுறுத்தல் பாசத்தையும் உணர்த்தும் குறிப்புடன் இருத் தலை ஊன்றிநோக்கின் உணரலாம். மலம் மூலமலம் ஆகந்துக மலம் என இரண்டாதலின், இவ்விரண்டின் குறிப்பை உணர்த்தவே, பாசத்தை உணர்த்த இரண்டதிகாரங்களை அமைத்திருக்கின்றனர் என்ற நுண்குறிப்பை உணர்த்தி யுள்ளனர் என்பதை ஊன்றி உணர்ந்தால் அன்றி உணர முடியாது.

தொல்காப்பிய முப்பொருள்

குறள் முப்பொருள்

பசுபதிபாசம் என்னும் முப்பொருள்களுள் பதியும் பசுவும் சித்துப் பொருள்கள். பாசம் சடப் பொருள். பதியும் பசுவும் சித்துப் பொருள்கள் ஆயினும், பதி அதி சூக்கும சித்துப் பொருளாம். அதனை நித்த சுத்த அதி சூக்கும சித்துப் பொருள் என்றும் கூறலாம். ஆகவே அதன்முன் பாசம் நில்லாது ; பற்றவும் பற்றது. அது சுத்த மெய்ஞ்ஞான சொரூப மானது. தோன்றாத் துணையாய் நின்று உயிர்கட்கு அருள் புரிதலின் அதிசூக்கும சத்தும் ஆகும். ஆகப் பதியாம் சிவம் பாசத்திற்கு இடம் தராமல், ஞானத்துக்கே இடமாய் இருப்பதாம். சிவன் சுத்த ஞான மாகிய ஒளிக்கே இடமாய் இருத்தலின், அவன் ஒளி இருள் இரண்டுக்கும் இடமானவன் என்பது கூடாது என் பதை நினைவில் வைத்தல் வேண்டும். இது குறித்தே சித்தாந்தச் செல்வராம் திருவள்ளு வர் சிவத்தின் உண்மையினை "வாலறிவன்" என்ற தொடரால் குறிப்பிட்டுள்ளனர். "சிவன் தனக்கு உவமை இல்லாதவன்" என்பது உண்மை என்றாலும், விளக்கம் கருதி இறைவனைச் சூரியனுக்கு ஒப்பாக ஒருவாறு கூறலாம். சூரியன் ஒளிக்கே இடமாக இருப்பது போல இறைவன் ஞானமாம் ஒளிக்கு இட மாக இருத்தலின், அவனை உவமை காட்டப் பட்டது. "அருக்கன் ஆவான் அரன் உரு அல்லனோ" என்ற அப்பர் வாக்கைத் துணை கொண்டால் அவனுக்கு அவனையே ஒப்புக் காட்டப்பட்டது என்று கூறினும் அமையும் என்க.

*இருள் அடராது*

*பதிப் பொருள்*

*வள்ளுவர் இறைவனை இருள் அடரா நிலையில் வால் அறிவன் என்றனர்*

*இறைவன் சூரியன்; அவன் ஒளிக்கேஇடம்; இருள் இல்லை*

ஒளிக்கும் இருளுக்கும் ஆகிய இரண்டுக்கும் இடமாய் இருப்பவன் பதி. அவன் என்றபோது, இவ்விரண்டிற்கும் இடமான பொருள் ஒன்று உண்டு என்பது தொனிக்கின்றதன்றோ? அஃது எஃது? அதுவே உயிர். அதாவது பசுவாம். பசு சார்ந்ததன் வண்ணம் ஆவது. அதாவது ஒளியைச் சார்ந்தபோது ஒளிக்கு இடமாக வும், இருளைச் சார்ந்தபோது இருளுக்கிடமாகவும் விளங் குவதாம். ஆகவே, ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும்

*பசுவின் தன்மை ஒளி இருள்*

என்றாலும் "ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்" என்பதை மறத்தல் கூடாது. இதனால் ஆன்மா ஒளியையும் இருளையும் மாறி மாறி அடையும் என்பது பெறப்பட்டது.

சதசத் காரணம்

சத்தே ஒளி; அசத்தே இருள். ஆக உயிர் சத்தைச் சார்ந்தபோது சத்தின் வண்ணமாயும், அசத்தைச் சார்ந்தபோது அசத்தின் மயமாயும் விளங்கலின் சதசத்து என்ற பெயரை ஆன்மா பெற்றுளது. ஆகவே உயிர்க்குப் பதியினிடத்திலும் பாசத்தினிடத்திலும் தொடர்புளது என்பது பெற்றாம். ஒளி சிவஞானத்தையும் இருள் பாசஞானத்தையும் குறித்தும் சொல்லாய் நிற்றலின் இவ்விரண்டின் நிலைகள் ஒன்றே ஆதலின், ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் ஆகும். சிவஞானபோதம் "இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா" என்பதையும் ஈண்டு உணர்தல் வேண்டும்.

பாசம் என்பது இருளே ஆகும். இதனை அவிச்சை

பாசத் தன்மை

என்றும் கூறுவர். சித்தாந்தம் மலம் என்று இதனைக் குறிப்பிடும். பாசமும் நித்தப் பொருள். முப் பொருள்களும் நித்தப் பொருள்கள் தாமே. திருமூலர்,

பாசமும் அநாதி

"அறிவறி வென்ற அறிவும் அநாதி
அறிவுக் கறிவாம் பதியும் அநாதி
அறிவினைக் கட்டிய பாசம் அநாதி
அறிவு பதியில் பிறப்பறுந் தானே"

என்றார். பதியினைப்போல் பசுபாசம் அநாதி என்று சுருக்கமாகவும் கூறியுள்ளார்.

பாசம் பசுவின் அறிவை மறைக்கும் ஆற்றல் வாய்ந்தது. கண் பொருள்களைக் காண்கிறது. ஆனால் பொருள் கண்ணைக் காண்பதில்லை. இதனால் பாசம் சடசத்து எனப்படும். இருள் பாசமானாலும் சிறிது வேற்றுமை உளது, இருள் தன்னைக் காட்டும் (அதாவது இருளாகிய ஒரு பொருளை). "பாசம் தன்வடிவையும் காட்டாது; ஞானத்தையும் காட்டாது. 'இரு பொருளும் காட்டாது இது' என்பது திருவருட்பயன். இதனால்தான் பாச

இருள்

இருள் அந்தகாரம் எனப்பட்டது. காரிட்ட ஆணவக்கருவறை என்பர் தாயுமானவர்.

இத்தகைய இருள் உயிரைப்பற்றி நிற்கும். இறைவனைப் பற்ருது. "பதியினைச் சென்று அணுகா பசுபாசம்" என்பது திருமந்திரம். "பசுபாசம் என்று இணைந்து இருப்பதுகொண்டே பசுவைப் பாசம் சாரும் என்பதை உணரலாம்."

பசு செயல் காரணம்

இந்தப் பாசம் உயிரைப்பற்றி இருப்பினும் ஞானசிரியர் துணை கொண்டு இதனைப் போக்கலாம். உயிர்கள் ஞானசிரியன்வழி ஒழுகவே இறைவன் நீறு கண்டிகை பூண்டவடிவில் திகழ்கின்ருன். அவ்வடிவினரிடம் இருத்தலினுல் தான் "மாலற நேயம் மலிந்தவர் வேடத்தை அரன் எனத் தொழு" நம் மெய்ந்நூல் ஆணை இடுகின்றது. இது குறித்தே மணிமொழியார் சற்குரு உளனே என்று நாடுவார் ஆயினர். நாடிப் பெற்று மலம் அற்று நின்ருர். இதனைத் தம் அனுபவத்தில் கண்டே, "மூலமலமாகிய மும்மலம் அறுக்கும் தூய மேனிச் சுடர்விடு சோதி" என்றும், "சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனை யாண்ட அத்தன்" என்றும் கூறுவாராயினர்.

குரு வழி ஒழுகல்

உள் உயிர்க்கு உயிராய் ஒளிக்கும் ஒரு பொருள் உளது. அதுவே அறிவு. அதுவே ஞானம். இந்தப் பேரறிவு பாசக் கலப்புடைய ஆன்மாவினுள் அடங்கி இருந்து செலுத்திக் கொண்டிருக்கிறது. இவ்வாறு இருந்து நடத்தாவிடின் உயிர்க்கு நற்கதி இல்லை. இந்த மறையினை (இரகசியத்தை) இறைவன் ஞானசாரியனுக வந்து அருளவில்லையாயின் உணர இயலாது. உணராத நிலையில் உள்ளே சிவம் கரந்து உறையும் நிலையே கரந்துறை நிலையாகும். இதனுல்தான் திருமந்திரம்,

குரு மாண்பு

> "உள்ளத் துளோன்கரந் தெங்கும் நின்றவன்
> வள்ளல் தலைவன் மலருறை மாதவன்
> பொள்ளற் குரம்பை புகுந்து புறப்படும்
> கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே "

என்றனர்.

* * * *

(தொடரும்)

## புரசைத் திருநெறிக் கழக 2-ம் மாத வழிபாடு

"கரண்டமலி தடம்பொய்கைக் காழியர் கோன்எதி
ரணையுங் காதல்கேட்டு
வரன்முறைமணிப் புனற்புகலூர் நோக்கிவரும்
வாகிசர் மகிழ்ந்து வந்தார்
திரண்டுவரும் திருநீற்றுத் தொண்டர் குழாம்
இருதிறமுஞ் சேர்ந்த போதில்
இரண்டுநிலவின் கடல்கள் ஒன்றாகி அணைந்தனபோல்
இசைந்த அன்றே."

அப்பரோடு வந்த அடியார் கூட்டமும், திருஞான சம்பந்தரோடு வந்த அடியார் கூட்டமும் சந்தித்தபோது ஒருவரை யொருவர் வணங்கிய தன்மையைச் சேக்கிழார் பெருமான் வர்ணித்திருப்பதை மேற்படி பாடலில் காண்கிறோம். அப்படிப்பட்ட காட்சி திருக்கச்சி நெறிக் காரைக் காட்டுக் கோபுர வாயிலில் காஞ்சிபுரம் திருநெறிக் கழகத்தினரும், மெய்கண்டார் கழகக் குழுவினரும் மற்றும் சில அடியார் கூட்டங்களும், புரசைத் திருநெறிக் கழகக் குழுவினரை 23-4-61 ஞாயிற்றுக்கிழமை யன்று காலை வரவேற்றபோது இருந்தது. எல்லோரும் ஒன்றுகூடிச் சத்யநாதேஸ்வரரையும் பிரமராம்பிகையையும் வழிபாடு செய்து இனிதமர்ந்தனர். திரு. T. V. திருஞானசம்பந்த முதலியாரவர்களும், வித்வான் K. சம்பந்த முதலியாரவர்களும், ஸ்தல விசேஷத்தைப் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். திரு. புண்ணியகோடி அவர்கள் அத்தலத்தில் ஞானசம்பந்தர் பாடிய தேவாரப் பதிகங்களை இன்னிசையுடன் பாடினார். அந்த சிவஸ்தலம் புதன்கிழமையில் வழிபாடு செய்ய உகந்த இடமாம். இந்திரன் வழிபட்டு வரம் பெற்ற இடமுமாகும்.

அங்கிருந்து அடியார்களனைவரும் திருக்கச்சி மேற்றளிக்குச் சென்று வழிபாடியற்றினர். அத்தலம் திருஞான சம்பந்தரால் பாடல் பெற்றதும், அப்பாடலைக் கேட்ட மாத்திரத்தில் விஷ்ணுமூர்த்தி சிவசாருபமெய்தினா ரென்றும், அப்பாடலை உற்றுக்கேட்ட மூர்த்திக்கு உற்றுக்கேட்டபிரானென்றும் பெயர் வழங்குவதாக வித்வான் K. சம்பந்த

முதலியார் தனது சொற்பொழிவில் கூறினார்கள். ஆளுடைய பிள்ளையார் அவ்வழியே கச்சி ஏகாம்பநாதரை வழி படச்சென்றமையின் அவ்விடத்திற்குப் பிள்ளையார்பாளயம் என்று பெயர் வழங்கிவருகிறது. ஓத உருகீஸ்வரர் என்ற பெயரால் அங்குள்ள சுவாமி வழிபாடு செய்யப்படுகிறது. ஞானசம்பந்தர் அங்குப் பாடிய பாடலை ஓதக் கேட்ட பெருமான் உருகினரென்றால், அப்பதிகத்தைக் கேட்டு விஷ்ணுமூர்த்தி சாரூபம் பெற்றனரென்றால், அப்பாடலைத் தினம் ஓதி வருவதால் நமக்கும் நன்மை உண்டாம் என்பதி லையமில்லை.

பிறகு அடியார்கள் கூட்டம் 63-வர் மடத்தில் உண்டி அருந்த விருந்து படைத்தவர் கைலாசநாதர் கோயில் தர்ம கர்த்தர் திரு. இராமச்சந்திர முதலியாரவர்கள் ஆவர். அவர் அன்று மாலைச் சிற்றுண்டியும் திருக்கூட்டத்திற்குத் தந்துத வினர்.

மாலை கைலாசநாதர் கோயிலருகாமையிலுள்ள திருக் கச்சியனேகதங்காவதம் என்ற ஸ்தலத்தை வழிபட்டுக் கைலாசநாதரை அடியார்கள் குழாம் வழிபட்டனர். திருக்கச்சி அனேகதங்காவதத்தில் விநாயகர் வழிபட்டு வல்லபையைத் திருமணம் செய்து கொண்டதாக வரலாறு. திருமணமாகாதவர்கள் அப்பதியை வழிபட்டுத் திருமண மெய்தலாம். சங்கீத வித்வான் திரு. நயினப் பிள்ளை நல் வழிப் படுத்தப்பட்டுச் சங்கீத வித்வானகப் புகழ் பெற்றது அம்மூர்த்தத்காலென்று கூறுகின்றனர்.

அங்கிருந்து, சுந்தரர் பதிகம்பாடிப் பொன் பெற்ற இட மாகிய திரு ஓணகாந்தன் தளியை வழிபட அடியார்கள் சென்றனர். ஓணன் காந்தன் சலந்தரேசுரன் என மூவர் வழிபட்டு முத்தி பெற்ற அத்தலத்தின் பெருமையை வித்வான் K. சம்பந்த முதலியார் அவர்கள் சுருக்கமாக விளக்கிக் கூறினர்.

புரசைத் திருநெறிக் கூட்டத்தின் இரண்டாம் மாத வழிபாடு அத்துடன் பூர்த்தியாகி இரவு பதினொரு மணிக் குச் சென்னைக்கு அடியார்கள் வந்து சேர்ந்தனர்.

—மா. ப. தியாகராசன்

———

அப்பர் இல்லம் - மணவாசகங் கடந்தார் தமிழ்மறைப் பள்ளி,
திருவதிகை

## கட்டிட நிதி வேண்டுகோள்

பார்வாழப் பணி செய்த பெருமானெனப் போற்றப் படுபவரே திருநாவுக்கரசு சுவாமிகள் எனும் அப்பர். அப்பெரியாரைச் சிவபெருமான் ஆட்கொண்ட தலம் திருவதிகை வீரட்டானமாகும். அதுவே தேவாரம் பிறந்தவூர். இதுகாறும் இவ்வூரில் தேவாரத் தமிழ்மறைப் பயிற்சிக்கு ஒரு பள்ளியும் ஏற்படவில்லை. சிறு முயற்சி தற்போது தொடங்கப் பெறுகிறது. உணவு, உடை, உறையுள் முதலியன ஏழைச் சிறுவர்களுக்குக் கொடுத்துச் சமயவொழுக்கம், கல்வி, தேவாரப் பயிற்சிகள் செய்விக்க அப்பர் இல்லம் என்னும் விடுதி நிறுவப் பெற்றுள்ளது. அதற்குரிய கட்டிடத்திற்காக 1961-ம் ஆண்டு மார்ச்சு திங்கள் 9-ம் நாளில் சென்னை மாநில அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் உயர்திரு. அ. உத்தண்டராம பிள்ளை, I.A.S., அவர்கள் அடிக்கல் நாட்டினார்கள். இதைப் பற்றிய விவரங்கள் 'இந்து' பத்திரிகையில் வெளி வந்துள்ளன. கட்டிடத்துக்காகப் பெரும் பொருள் வேண்டியிருப்பதால் இதனைக் கண்ணுறும் அன்பர்கள் தங்களால் இயன்றவளவு உதவிச் சிவபுண்ணியப் பேறு பெறுதல் வேண்டும். உதவுந் தொகையைக் கீழ்கண்ட இயக்குநருக்குக் குறித்த முகவரிக்கு அனுப்பப் பெரிதும் வேண்டப்படுகிறது. இப்பள்ளி ஜூன் 1961-ல் துவக்கமாகும்.

இவ்வில்லத்தின் "கொள்கைகளும் செயல் முறைகளும்" என்ற தாள் பதினன்கு நயா பைசா அஞ்சல் தலை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். பொருளுதவி செய்ய விரும்பும் புண்ணியர்கள் கூடிய விரைவில் செய்வார்களாக. தந்த பணத்துக்கு ரசீது உடனுக்குடன் அனுப்புவதுடன் தக்க முறையில் கட்டிடத்தில் பதிவு செய்யப்படும்.

"நாவரசர் நிலயம்"
திருவதிகை,
பண்ணுருட்டி,
1—5—1961

ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார்,
இயக்குநர்.

பெரியபுராண வகுப்புகள் : சேக்கிழார் திருப்பணிக் கழகச் சார்பில், குன்றத்தூரில் 11-5-61 முதல் 20-5-61 வரை காலை 9 முதல் 11 வரையிலும், பிற்பகல் 4 முதல் 6 வரையிலும் நடைபெறும். முதல் மூன்று நாட்களில் காஞ்சிபுரம்-சித்தாந்தப் பேராசிரியர் - க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ. எல்.டி., அவர்களும், இடை மூன்று நாட்களில் சென்னைத் திருப்புகழ் சதுரர் சே. த. இராமலிங்கம் பிள்ளை, பி ஏ. பி.டி. அவர்களும், இறுதி நான்கு நாட்களில் வித்துவான் - பாலூர் கண்ணப்ப முதலியார், எம். ஏ., எம்.ஓ.எல். அவர்களும் பேராசிரியர்களாக அமர்ந்து பெரியபுராண வகுப்புக்களை நடத்துவார்கள். இரவு 7½ முதல் 9 வரை அந்நாட்களில் பல சைவப் பேரறிஞர்களின் அரிய பெரிய சொற்பொழிவுகளும் நிகழும். அன்பர்கள் அனைவரும் கலந்துகொண்டு பயன் பெறலாம்.

பிழை திருத்தம்: 1961 ஏப்ரல் மாதத்திய 'சித்தாந்தத்தில்' வெளிவந்த 'மெய்கண்டார் காலச் சூழ்நிலை' என்ற கட்டுரையில் கீழ்க்கண்ட பிழை திருத்தங்களைச் செய்துகொள்க:

| | பிழை | திருத்தம் |
|---|---|---|
| பக்கம் 144 | ஸ்வேதகன்யர் | ஸ்வேதாசாரியர் |
| ,, | அரசர்களோ, பார்த்தால் | அரசர்கள் களே பரத்தாலோ |
| ,, | தாணுகமவிதாயி | நாணுகமவிதாயி |
| பக்கம் 146 | நிறைவேறுவதேயன்றி | நிறைவேற்றுவதே யன்றி |
| ,, | என்று பொருளும் | என்ற பொருளும் |

பிரிவாற்றாமை : "சொல்லின் செல்வர்" எனத் தமிழ் மக்களாற் பெரிதும் பாராட்டப்பட்டு வந்த பேரறிஞரும், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் 25 ஆண்டுகள் அரும்பணிகள் பல ஆற்றி அண்மையில் வெள்ளிவிழாக் கொண்ட பெருந்தகையும், சென்னை - அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் தமிழாராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் படுவதற்கென ஐம்பதாயிரம் வெண்பொன்கள் வழங்கியவரும், தமிழின்பம் ஊரும்பேரும் திருவள்ளுவர் நூல் நயம் முதலிய பல நூல்களின் ஆசிரியரும் ஆகிய டாக்டர் திரு. ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி.எல்., அவர்கள் 25-4-61 அன்று இவ்வுலக வாழ்வு நீத்து மறைந்து போயினமை

குறித்துச் சமாஜம் பெரிதும் வருந்துகின்றது. அவர்தம் ருயிர் சிவபிரான் திருவடி நிழலில் வைகி என்றும் இன் புறுக எனச் சமாஜம் திருவருளை வழுத்துகின்றது.

——

## மதிப்புரை

பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள் :—இந்நூல் மிகச் சிறந்த ஓர் ஆராய்ச்சி நூல். இதன் கண் 29 விலங்குகள், 42 பறவைகள், 15 வகை ஊர்வன, 17 வகை நீர்வாழ்வன வாகிய உயிர் வகைகளைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் ஆங்காங்குக் காணப்படுகின்ற அரிய குறிப்புக்கள் பலவும் ஒருசேரத் தொகுத்து, அழகிய இனிய சுவை மிக்க நடையில் விளக்கப்பெற்றுள்ளன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறை விரிவுரையாளரும், நுண் மாண் நுழைபுலம் மிக்க பெரும் புலவரும் ஆகிய வித்துவான் திரு. சே. வேங்கடராமச் செட்டியார் அவர்கள், 'ஞானசம்பந்தம்' இதழில் தாம் தொடர்பாக எழுதி வந்த அரிய கட்டுரைகளைத் தொகுத்து இந்நூலாக வெளியிட்டுள் ளார்கள். ஆசிரியரின் சிறந்த புலமையும், நினைவாற்றலும், கருத்துக்களை நிரலே தொகுத்துச் சுவை கெழும விளக்கும் திறனும் பிறவும் பெரிதும் பாராட்டற்பாலன. பேராசிரியர், பல்கலைச் செல்வர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், எம்.ஏ., பி.எல், எம்.ஓ.எல்., அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி யுள்ளார்கள். சங்க இலக்கியங்களைப் பயின்று சுவைத்து மகிழ விரும்புவோர்களுக்கு இந்நூல் மிகப் பெரிதும் பயன்படும். பக்கங்கள் 295; விலை ரூ. 4-50. விற்பனையுரிமை : பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1.

பழந்தமிழ் நூலில் உயிர்வகைகள் பற்றி
அழுந்திமிக ஆராய்ந் தரிய—செழும்பொருள்கள்
வேங்கட ராமநல் வித்தகனார் சேர்த்தளித்தார்
ஈங்கொருநூல் ஆக்கி இனிது. —முருகவேள்

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.